# அம்புலிமாமா



மதிமுகம் : 103 ஆகஸ்ட் 2000 புன்னகை : 12

## பொருளடக்கம்


| | |
|---|---|
| தலையங்கம் | 5 |
| செய்திச்சுடர் | 6 |
| நிறுவனரின் கடிதம் | 8 |
| மோட்சம் வேண்டாம் ! | 9 |
| அரவிந்தர் | 15 |
| யார் தகுந்தவன் ? | 16 |
| தங்க சிம்மாசனம் | 19 |
| பண்பாடு வரலாறு | 26 |
| படையை விரட்டிய பாட்டு | 30 |
| காவேரி கரையோரமாய் - 10 | 35 |
| காப்பது என் கடமை ! | 39 |
| பதிலடி கொடுத்தான் ! | 44 |
| மகாபாரதம் | 45 |
| எனக்கும் கொடு ! | 52 |
| இதுவே காரணம் ! | 54 |
| பரோபகாரி பழனி | 56 |
| பாரத தரிசனம் | 60 |
| ஆக்கப்பூர்வமான போட்டி | 61 |
| பாரத நாடு - அன்றும் இன்றும் | 62 |
| ஆக்கப்பூர்வமான போட்டி பரிசு | 64 |
| போட்டோ வாக்கியப் போட்டி | 66 |


## சிறப்புப் படைப்பாக



மோட்சம் வேண்டாம்! (வேதாளக் கதை)



படையை விரட்டிய பாட்டு !



காப்பது என் கடமை !



பாரதப் பண்பாடு-வரலாறு

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai–600 026. Editor: Viswam

நீங்கள்

அயல்நாடுகளில்
உள்ள உங்கள்
உறவினர், நண்பர்களுக்கு



# அம்புலிமாமா

இதழை
அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

**அஸ்ஸாமி, வங்களாம், ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு**

அயல் நாட்டிலும் தாய்நாட்டில் உள்ள மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கட்டும்

## சந்தா விவரம்

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில் பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.900.

இந்தியாவில் தரைவழித் தபாலில் பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.120.

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டியில் அல்லது மணியார்டரில் 'சந்தமாமா இந்தியா லிமிடெட்' என்ற பெயர் எழுதி அனுப்பவும்

முகவரி :
**பதிப்பகப் பிரிவு**
**சந்த மாமா இந்தியா லிமிடெட்**
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி, சென்னை - 600026.


ஆசிரியர்
**விஸ்வம்**



எல்லாக் கடிதப்
போக்குவரத்திற்கும்
சந்தமாமா
பத்திரிக்கைப் பிரிவு
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி,
சென்னை - 600026.
டெலி/ பேக்ஸ்
4841778/4842087
ஈமெயில் சந்தமாமா
@விஎஸ்என்எல்.காம்
**மும்பை அலுவலகம்**
2/Bநாஜ் பில்டிங்ஸ்
லாமிங்டன் ரோடு
மும்பை 400004
போன்:002-3887480
பேக்ஸ்:022-3889670


அமெரிக்காவில் தனிப் பிரதி 2 டாலர்கள் வருட சந்தா:20 டாலர்கள்
பணம் அனுப்ப வேண்டிய முகவரி:

**இந்தியா அப்ராட்**
43, வெஸ்ட் 24வது தெரு
நியூயார்க், என்.ஒய்.10010
டெலிபோன் : (212)929-1727
பேக்ஸ் : (212) 627-9503



நிறுவியோர்
பி.நாகிரெட்டி சக்கரபாணி

## நம்மையே பார்த்துக் கொள்வோம்!

இந்த ஆண்டு இருபதாவது நூற்றாண்டின் கடைசி ஆண்டு முடிந்து இருபத்தொன்றாவது நூற்றாண்டின் முதலாவது ஆண்டின் ஆரம்பமும் ஆகும். இந்தப்புத்தாண்டில் ஆகஸ்ட் 15ல் நாம் கொண்டாடும் சுதந்திரதின விழா மிகவும் சிறப்புற்றதாகும்.

நாம் சுதந்திரம் பெற்று ஐம்பத்து மூன்று ஆண்டுகளாகின்றன. இரண்டாவது உலகப்போருக்குப் பின் பல நாடுகள் சுதந்திரம் அடைந்தன. அப்போரில் அணுகுண்டால் தன் இருநகரங்கள் படுநாசம் அடைந்தபோதிலும் ஜப்பான் தன் உழைப்பால் முன்னேறி இன்று உலகின் முக்கிய நாடுகளில் ஒன்றாகத் திகழ்கிறது. இது போல மிகச்சிறிய நாடான சிங்கப்பூரும் முன்னேறி விட்டது.

ஆனால் நம் நாடு முன்னேறாததற்குக் காரணம் என்ன? நம் விஞ்ஞானிகளும் பொறியாளர்களும் மேலை நாடுகளுக்குப் போய்ச் சிறந்து விளங்குகிறார்கள். ஆனால் இங்கு இல்லை. ஏன்? இந்தியாவில் எவ்விதத்திலும் செயல்பட முடியவில்லை என அவர்கள் கூறுகிறார்கள். அரசாங்க அதிகாரிகள் விரைவாகச் செயல் படுவதில்லை, போதிய அக்கறையும் காட்டுவதில்லை என்பதும் அவர்களது குறைகூறல், இந்நிலையை நாம் சகித்துக் கொண்டு தான் இருக்க வேண்டுமா? மக்கள் தொகை வேறு பெருகிக் கொண்டே போகிறது. இயற்கையின் சீற்றங்கள் வேறு எதனையும் பாதித்து வருகின்றன. இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டு நாம் செயல் பட்டாலே நாட்டின் முன்னேற்றத்தைக் காண முடியும். அரசாங்க அதிகாரிகளும் நம்மவர்கள் தாம். எனவே நம் நாட்டின் உயர்வோ தாழ்வோ நம் கையில் தான் உள்ளது. எனவே அந்தரங்க சுத்தியுடன் கறைபடாத கை, மனதுடன் செயல்பட்டு நாம் நாட்டின் முன்னேற்றத்தைக் காண்போமாக.

# செய்திச்சுடர்

## வயது ஒரு தடை இல்லை!

கல்வி கற்க இன்ன வயது தான் வேண்டும் என்பதில்லை. முதியவர்கள் கூடக்கல்வி கற்கலாம் என்பதற்கு இதோ இரு உதாரணங்கள். டில்லி பல்கலைக்கழகத்தில் பாதுகாப்புக் காவலராகப் பணி புரியும் 44 வயதான ராஜ்கிஷோர் பாண்டே என்பவர் பிஎச்.டி பட்டத்திற்பான தம் படைப்பை இப்போது சமர்ப்பித்திருக்கிறார். 1980ல் 12வது வகுப்பை கான்பூரருகே தம் ஊர்ப் பள்ளியில் முடித்து விட்டு வந்த இவர் பி.ஏ, எம்.ஏ. பட்டப்பரீட்சைகளை தனிப்பட்ட முறையில் எழுதித் தேர்வு பெற்றார். பல்கலைக்கழகம் கூட இவர் பி.எச்.டி. பட்டம் பெற இவரது பணிபுரியும் நேரத்தை இரவிற்கு மாற்றியது.



இத்தாலியைச் சேர்ந்த மரியாலூயிசா பியட்ரரோயா என்ற 105வயது மூதாட்டி செப்டம்பர் மாதத்தில் ப்ரிகேஜி என்ற ஆரம்பப்பள்ளிப் படிப்பை துவக்கப் போகிறாராம். அவரது சிறு வயதிலிருந்து இது வரை அவர் எந்த ஒரு பள்ளியின் வாசலைக் கூட மிதித்து இல்லையாம்.

## வலியும் குறைவு! அழுத்தமும் குறைவே

இந்தியாவிலும் சிங்கப்பூரிலும் குழந்தைகள் பெரிய புத்தகப் பைகளை முதுகில் சுமந்து கொண்டு செல்வதை சர்வசாதாரணமாகக் காணலாம். தற்போது இந்தச்சுமையின் அழுத்தத்தையும், வலிமையையும் எவ்வாறு குறைப்பது என்ற ஆராய்ச்சி நடந்து வருகிறது. முதுகிலும் தோளிலும் வலி ஏற்படக் காரணம் குழந்தைகள் புத்தகப் பைகளில் புத்தகங்களோடு பென்சில் பெட்டி, விளையாட்டு பொம்மைகள், தண்ணீர் பாட்டில்கள் ஆகியவற்றையும் வைத்துக் கொண்டு செல்கிறார்கள். எனவே இனி இப்பைகளில் ஸ்பிரிங் பொருத்தி பஞ்சை அட்டை போல வைத்து முதுகில் அழுத்தாதபடி புது வகைக் பைகளைத் தயாரிக்க வழி செய்யப்படுகிறது.



## பீடி மீது தடை!

பீடி என்பது சிகரெட்டைப் போன்றது. தென்னிந்தியாவில் மிக அதிகமாகத் தயாரிக்கப்படுவது. இது மிக மலிவானதால் தொழிலாளர்களிடையே பிரபலமாகியுள்ளது. தற்போது பீடி நம் நாட்டிற்கு அந்நியச் செலாவணியைச் சம்பாதித்தும் கொடுக்கிறது. இதற்கு அது அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாவதே காரணம். ஆனால் அண்மையில் அமெரிக்கா தன் நாட்டில் பீடி இறக்குமதிக்குத் தடை விதித்ததால் நம்நாட்டு பீடித் தயாரிப்பாளர்களின் ஏற்றுமதி மிகவும்' குறைந்து விட்டது. இதற்குக் காரணம் சிறார் இத்தொழிலில் ஈடுபட்டிருப்பதே.





## 'எலியை அழுக்கினால் பஞ்சதந்திரக்கதை!

பஞ்சதந்திரத்தில் எலியைப் பற்றிய பல கதைகள் இருந்தாலும் நாம் கூறும் இந்த எலி இன்டர்நெட்டின் அமைப்பில் உள்ளது. கம்ப்யூட்டரில் தொடர்புள்ள இந்த எலி வடிவத்தை அமுக்கினால் சிறு திரையில், பஞ்சதந்திரக்கதைகளையும், கதாசரித்சாகரக் கதைகளையும் காணலாம். புனே பல்கலைக் கழகத்தின் விஞ்ஞானத்துறை இவற்றை தயாரித்து விட்டது. இத்துடன் சம்ஸ்கிருத இலக்கியப் பழமொழிகளையும், சம்ஸ்கிருதத்தில் சுபாஷிதானி என்ற அறிவுரைச் செய்யுள்களையும் தயாரித்து இதற்கு சம்ஸ்கிருத தகவல் தொகுப்பு எனப் பெயரிட்டிருக்கிறார்கள். இது கான்பூர், ஹைதராபாத் ஆகிய இடங்களின் இந்தியத் தொழில் நுட்ப கழகங்களும் பெங்களூர் கம்ப்யூட்டர் ஆராய்ச்சி நிலையமும் உதவி புரிந்ததால் தயாரிக்கப்பட்டுள்ளது.



# நிறுவனரின் கடிதம்



அன்புமிக்க வாசகர்களுக்கும் நண்பர்களுக்கும்,

வணக்கம். அம்புலிமாமா தொடங்கிய போது நம் நாட்டின் நிலை இப்போதைக்கு முற்றிலும் வேறுபட்டதாக இருந்தது. அப்போது சிறுவர்களுக் கென்று தனியாக ஒரு பத்திரிகை இருக்கவில்லை. அப்போது அச்சடிக்கும் தொழில் இப்போது அடைந்துள்ள விஞ்ஞான முன்னேற்றத்தைப் பெற்றிருக்கவில்லை. கம்ப்யூட்டர் போன்ற விஞ்ஞான சாதனங்கள் இருக்கவில்லை.

அப்போது நம் நாடு ஆங்கிலேயரின் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்ற காலம். அப்போது நானும் என் நண்பர் அமரர் சக்கரபாணியும் ஆழ்ந்து சிந்தித்து வருங்கால பாரத நாட்டின் சிறுவர் சிறுமியர் எப்போதும் சிரித்த முகத்துடன் நம் பண்பாட்டை நன்கு வளர்ப்பவர்களாக இருக்க வேண்டுமென நினைத்தோம். இதற்கு அவர்கள் நல்ல உயர் தர இலக்கியங்களைப் படிக்க வேண்டும் என எண்ணினோம். நாம் இந்தியர் என்ற உணர்வை அவர்களுள் உண்டாக்க நினைத்தோம். இதன் பயனாகத் தோன்றியது தான் 'அம்புலிமாமா'. பலமொழிகளில் மனதைக்கவரும் கதைகளையும் புராணங்களையும் இதிகாசங்களையும் நாட்டுப்புறக் கதையும் அளித்து இதற்கான வழி வகுத்தோம். இளம் பிஞ்சு மனங்கள் இன்புற்றிருக்கச் செய்தோம்.

நாளாவட்டத்தில் அம்புலிமாமா ஒவ்வொரு குடும்பத்திற்கும் இன்றியமையாததென்று ஆகி விட்டது. அவ்வப்போது ஏற்பட்ட இன்னல்களைச் சமாளித்து நிலைத்து நின்று வெற்றி நடையும் இது போட்டு வருகிறது. அண்மையில் தவிர்க்க முடியாத காரணத்தால் ஓராண்டு காலத்திற்குச் சற்று மேலாக இதனை வெளியிட முடியாதும் போயிற்று. தேர்விழாவில் தேரின் சக்கரம் மண்ணில் புதைந்து நின்றாலும் முயன்று சக்கரத்தை நகர்த்தி தேரை அது இருந்த இடத்தில் கொண்டு போய் நிறுத்தப்படுவது போல அம்புலிமாமாவும் பழைய நிலைக்கு வந்து பீடு நடை போட்டுக் கொண்டிருக்கிறது.

இச்சமயத்தில் இரு விஷயங்கள் எனக்கு மகிழ்ச்சியை அளிக்கின்றன. ஒன்று அம்புலிமாமா தனது 53வது ஆண்டைக் கொண்டாடுவது. மற்றது ஒரு சிறிது கால ஓய்விற்குப் பின் மேலும் கவர்ச்சிகரமாய் புத்தொளி வீசியவாறு இது உங்கள் முன் தோன்றுவது தான்.

அம்புலிமாமா நாளுக்கு நாள் வளர்ச்சி பெற்று முன்னேற வேண்டுமென ஆசைப்படு வதுடன் வாசகர்களுக்கும் என் நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உங்களன்புள்ள
பி.நாகிரெட்டி



வேதாளம் சொல்லும் கதை

# மோட்சம் வேண்டாம்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைச்சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நடு நிசியில் இப்படி சிரமப்படுவதைக் கண்டு பரிதாபப்படுகிறேன். நீ உன் முயற்சியில் வெற்றி பெறுவாயோ என்று சந்தேகம் ஏற்படுகிறது. உன்னைப் போல குருநாதன் என்பவன்



மோட்சம் அடைய முயன்று முடிவில் அவனே அது வேண்டாமெனத் தீர்மானித்து விட்டான். அவனது கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

வெகு காலத்திற்குமுன் ஒரு காட்டினருகே இருந்த ஊரில் குருநாதன் என்ற இளைஞன் இருந்தான். தந்தை தாயற்ற அவனுக்கு உற்றார் உறவினர் என்று சொல்லிக் கொள்ள யாருமே கிடையாது. எவ்வளவு முயன்றும் அவனுக்கு ஒரு வேளை சாப்பாடு கிடைப்பதே அரிதாக இருந்தது. வாழ்க்கை மீது வெறுப்பு அடைந்து காட்டிற்குள் சென்று அவன் கடுந்தவம் புரிந்தான். அவன் முன் கடவுள் தோன்றி ''உனக்கு என்ன வரம் வேண்டும்'' என்று கேட்டார்.

குருநாதனும் ''எனக்கு இப்போது மோட்சம் கிடைக்க வேண்டும்'' என்றான். கடவுள் சிரித்து ''மனிதன் தனக்கும் பிறருக்கும் ஏதாவது ஒரு விதத்தில் பயனுள்ளவனாக இருக்க வேண்டும். நீ அப்படி இராததால் உனக்கு இப்போது மோட்சம் கிடைக்காது. உனக்கு நான் அற்புத சக்திகளை அளிக்கிறேன். அவற்றால் பிறருக்கு உதவு. என்று நீ சுய நலம் கருதாமல் பிறருக்கு உதவுகிறாயோ அன்றே உனக்கு மோட்சம் கிடைக்கும்'' எனக் கூறிவிட்டு மறைந்தார்.

குருநாதன் விரைவில் மோட்சத்தை அடைய எண்ணி காட்டை விட்டு வெளியே வந்தான். அப்போது ஒரு இளைஞன் தலை கீழாக இருந்து கைகளால் நடந்து கொண்டிருந்தான். அது கண்டு ஆச்சரியப்பட்டு அவன் அந்த இளைஞனிடம் அதற்கான காரணத்தைக் கேட்டான். அவனும் ''என் தந்தைக்கு ஒரு விசித்திர நோய் கண்டுள்ளது. எந்த மருந்தாலும் அதைப் போக்க முடியவில்லை. அவரை ஏதோ ஒரு துஷ்ட சக்தி பிடித்துக் கொண்டுள்ளதால் நான் தினமும் இரண்டு மணி நேரம் இப்படி நடந்தால் அது சாந்தம் அடைந்து விலகிப் போய் விடும் என்று எங்கள் ஊர் மந்திரவாதி சொன்னார் அதனால் இப்படி நடக்கிறேன்'' என்றான்.

''இப்படிச் செய்ய கஷ்டம் இல்லையா?'' என்று குருநாதன் கேட்க அவனும் ''கஷ்டமாகத்தான்

இருக்கிறது. உலகில் காலில்லாதவன் கஷ்டப்படுவதில்லையா? கண்ணில் லாதவன் என்ன பாடுபடுகிறான்! என் தந்தையின் நோய் போக இதுதான் வழி என்றால் இது எனக்குக் கஷ்டமா?'' என்றான். அதைக் கேட்டு குருநாதன் மகிழ்ந்து போய் ''நீ மிகவும் நல்லவன். உன் இந்த நற் குணமே உன் தந்தையின் நோயைப் போக்கிவிடும். நீ எழுந்து நில். நீயும் புத்துணர்ச்சி பெறுவாய். வீட்டிற்குப் போய்ப்பார். உன் தந்தை யும் குணம் அடைந்திருப்பார். நான் சொல்வதை நம்பு'' என்றான்.

அந்த இளைஞனும் ''சரி, நான் என் வீட்டிற்குச் செல்கிறேன். நீங்களும் என்னுடன் வாருங்கள். என் தந்தை குணம் அடைந்திருந்தால் உங்களுக்கு கைமாறாக ஏதாவது நான் செய்வது தான் முறை'' என்றான். குருநாதனோ ''நான் செய்யும் உதவிக்கு எதையும் ஏற்கமாட்டேன்''. எனவே அந்த இளை ஞனும் ''ஐயா, தங்களைப் போன்ற மகாத்மாக்களுக்கு என் போன்றவர் களால் என்ன கொடுக்க முடியும்? அப் படிக் கொடுப்பது நாங்கள் பெரும் பணக்காரர்களென்றும் நீங்கள் கை நீட்டிக் கேட்பவர்கள் என்றும்ஆகி விடும். இது கர்வத்தின் அறிகுறி. இதை நான் செய்ய விரும்பவில்லை. எங்கள் ஊரில் இன்னும் பலர் சிரமப்படுபவர் கள் இருக்கிறார்கள். தாங்கள் அங்கு வந்து அவர்களது சிரமங்களையும் போக்க வேண்டும்'' என்று வேண்டினான்.

குருநாதனும் சற்று யோசித்து ''எனக்கு ஒருவேலை இருக்கிறது.




அதைச் செய்து விட்டு வருகிறேன். நீ போய்க் கொண்டிரு'' எனக் கூறி அவனை அனுப்பினான். அதன் பின் குருநாதன் பக்தி சிரத்தையுடன் கடவுளை தியானிக்கவே அவரும் அவன் முன் தோன்றினார். அப்போது குருநாதன் ''நான் சுயநலம் கருதாமல் பிறருக்கு உதவி விட்டேன். எனக்கு மோட்சத்தை அருளுங்கள்'' என்றான். கடவுளும் ''உன்னைவிட அந்த இளைஞன் சுயநலம் இல்லாதவன். அவனுக்கே மோட்சம் அளிக்காத போது உனக்கு எப்படி அளிப்பது? நீ வாக்க ளித்தபடி அந்த இளைஞனின் ஊருக் குப் போய் அங்குள்ளவர்களுக்கு உதவி புரி'' எனக் கூறிவிட்டு மறைந்தார்.

குருநாதன் அப்போது ''என்னைவிட அந்த இளைஞன் சுயநலமற்றவனா?''

என யோசித்தவாறே அந்த இளைஞ னின் ஊருக்குச் சென்றான். அங்கு அந்த இளைஞனின் தந்தை முற்றிலும் குணம் அடைந்து விட்டதைக் கண்டான். அந்த இளைஞனும் குரு நாதனின் சக்தியைப் பற்றி ஊராரிடம் கூறவே அவர்களும் அவனை வணங்கி வரவேற்றுத் தங்கள் கஷ்டங்களைப் பற்றிக் கூறினார்கள். கடன் தொல்லை கள், நோய்களால் அவஸ்தை, குடும்பச் சச்சரவு, சரியாக நிலத்தில் விளைச்சல் இல்லாதது, கிணற்றில் நீர் ஊறாதது என்று பல பிரச்சினைகளை அவர்கள் கூறவே குருநாதன் ஒவ்வொன்றையும் தீர்த்து வைத்தான்.

அவ்வூரில் ரங்கன் என்ற போக்கிரி எல்லோரையும் துன்புறுத்தி வந்தான். அவனைப் பலர் தம் அடியாளாகப் பயன் படுத்திக் கொண்டிருந்தார்கள். குருநாதன் அங்கு வந்த பிறகு எல்லாப் பிரச்சினைகளும் தீர்ந்து விடவே ரங்கனுக்கு வேலையே இல்லாமல் போய் விட்டது. அவனும் ஊரில் நன்மைகள் ஏற்பட்டது கண்டு மனம் திருந்தி ஒருநாள் குருநாதனைக் கண்டான் அவன் பணிவுடன் வணங்கி யவாறே "சுவாமி! இது நாள்வரை நான் ஒரு போக்கிரியாகக் காலம் கழித்து விட்டேன். இதனால் என் மனம் வருந் துகிறது. நான் நற்காரியங்கள் செய்து மோட்சம் அடைய விரும்புகிறேன் அதற்கு வழி கூறுங்கள்" என்று வேண்டினான். குருநாதனோ "உனக்கு ஏராளமாய் பணம் கொடுக்கிறேன். அதோடு வேறு ஏதாவது ஒரு ஊருக்குப் போய் சுகமாக வாழ்" என்றான்.

ரங்கனோ "வேண்டாம் சுவாமி! வேறு எங்காவது போனால் முன் போலப் போக்கிரியாகி விடுவேன். எனவே நான் மோட்சம் அடையவே



விரும்புகிறேன்'' என்றான். அப்போது குருநாதன் ''இது பற்றி யோசித்துச் சொல்கிறேன். நாளைக்கு வா'' என்று சொல்லி அவனை அனுப்பினான். அதன் பின் குருநாதன் கடவுளை தியானித்தான். கடவுளும் ''ரங்கனுக்கு நீ மோட்சம் கொடுக்க விரும்பினால் நீ மோட்சத் திற்குப் போகும் ஆசையை விட்டு விட வேண்டும்'' எனக் கூறி விட்டு மறைந் தார். மறுநாள் ரங்கன் வந்த போது குருநாதன் அவனிடம் ''நான் என் புண்ணியத்தை எல்லாம் உனக்குக் கொடுக்கிறேன். கடவுளை தியானித்துக் கொண்டு நீ புனித ஆற்றில் நீராடு. உனக்கு மோட்சம் கண்டிப்பாகக் கிடைக்கும்'' என்று கூறி அனுப்பினான்.

அப்போது கடவுள் குருநாதனின் முன் தோன்றி ''உனக்கு இப்போது மோட்சம் அளிக்கிறேன்'' என்றார். அப்போது குருநாதன் ''ஆண்டவனே! இப்போது நான் மோட்சத்தை அடைய வேண்டும் என்று ஆசைப்படவில் லை'' என்றான். கடவுளும் ''உன் ஜென்மம் இத்துடன் முடிகிறது. இன்று மாலை நீ புனித நதியில் நீராடு. உனக்கு மோட்சம் கிடைக்கும்'' என்று கூறி விட்டு மறைந்தார்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! குருநாதன் சட்டென மோட்சத்தை அடைந்து விட வேண்டு மெனத்தானே ஆசை கொண்டிருந் தான்? அவன் இருமுறை கடவுளை தியானித்துத் தனக்கு உடனேயே மோட்சத்தை அளிக்கும்படி வேண்டி னானே. அப்போது கடவுள் அவனுக்கு மோட்சத்தை அளிக்காமல் அவன் தனக்கு மோட்சம் வேண்டாம் என்று கூறியபோது ஏன் அளித்தார்? கடவுளே மோட்சத்தைக் கொடுப்பதாகக் கூறிய போது குருநாதன் அது தனக்கு





அறிவுள்ளவர்கள் தாம் சம்பாதித்தையும் தம் வாழ்க்கையையும் பிறர் நன்மைக்காக அர்ப்பணிப்பார்கள். ஏனெனில் அவை நிலைத்து இருப்பவை அல்ல என்பது அவர்களுக்குத் தெரியும்

- கௌடில்யர்

வேண்டாம் என்று கூறியது அறிவற்ற செயல்தானே? பிறருக்குக் கெடுதல்களையே செய்து வந்த ரங்கனுக்கு மோட்சம் கிடைத்தது சரியா? இக்கேள்விகளுக்கு சரியான விடைகள் உனக்கு தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''குருநாதன் தனக்கு மோட்சம் வேண்டாம் என்று கூறியதில் பிறருக்கு உதவ வேண்டும் என்ற எண்ணம் உள்ளது. தனக்குக் கிடைத்த அபூர்வ சக்திகளைக் கொண்டு எல்லோருக்கும் நற்பணி புரியலாமென்றாலும் அதனுடன் மனிதத்தன்மை, நற்சிந்தனை, நல்லறிவு கொண்டு மக்களுக்குப் பணிபுரிந்து வருவதே உயர்வானது என்பதை அவன் உணர்ந் தான். மனித சக்திக்கும் அப்பாற்பட்ட சக்தி ஒன்று இருப்பதை கடவுள் குருநாதனுக்குப் புரிய வைத்தார். குருநாதன் வாயிலாக அச்சக்தியை உலகினருக்கு அவர் காட்டினார். அந்த சக்தியை தற்காலிகமாக குருநாதனுக்கு அளித்து அதன் முடிவு காலம் வந்ததும் குருநாதனுக்கு மோட்சம் அளித்தார். ரங்கன் உண்மையிலேயே மனம் மாறியவன். அவன் உலகில் இன்னும் சில நாட்கள் இருந்தால் முன்போலப் போக்கிரியாகக் கூட ஆகிவிடலாம். அதற்கு வாய்ப்பு அளிக்கக் கூடாது என எண்ணியே அவனுக்கு மோட்சத்தை அளித்தார். எனவே குருநாதனின் செயல் அறிவற்றதல்ல'' என்றான்.

விக்கிரமனின் இந்த சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப்போய் வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

உலகப் புகழ் பெற்ற அரவிந்தர் 1872ஆகஸ்ட் 15ல் கல்கத்தாவில் டாக்டர் கோ.டி.கோஷிற்கும் சுவதந்திரதேவிக்கும் பிறந்தவர். டார்ஜிலிங் ஐரிஷ்கான் வென்டிலும் இங்கிலாந்திலும் கல்வி பயின்றார். இவர் லண்டன், கேம்பிரிட்ஜ் ஆகிய இடங்களில் கல்வி கற்று ஐ.சி.எஸ் பரீட்சையிலும் தேர்வு பெற்றார். அப்போது பரோடா மன்னர் சர் சாயோஜி ராவ் கெய்க்வாட் ஒரு பதவியை அளிக்கவே அவர் இந்தியாவிற்கு வந்து பரோடா மகாராஜா கல்லூரியில் ஆங்கில, பிரெஞ்சு பேராசிரியர் பதவியை ஏற்றார்.

அடுத்த சில ஆண்டுகளில் இவர் சமஸ்கிருதம், லத்தீன், கிரேக்க மொழிகளில் புலமை பெற்றார். வேத, உபநிஷத்துகளைக் கற்று யோக சாஸ்திரத்தை பயின்றார். ஆங்கில ஆட்சியை எதிர்க்க இரகசியமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இளைஞர்களுக்குப் பயிற்சியும் இவர் அளித்து வந்தார்.

பரோடாவை விட்டு கல்கத்தாவிற்கு 1905ல் வந்து சில தேச பக்தர்கள் சேர்ந்து துவக்கிய தேசியக்கல்லூரியின் முதல்வர் பதவியை ஏற்றார். ஆனால் சில மாதங்களுக்குப் பிறகு 'பந்தே மாதரம்' என்ற புரட்சிக் கருத்துப் பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றார்.



அரவிந்தர்

சூரத்தில் 1907ல் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் திலகர் தலைமையில் தீவிரவாதக் கருத்து வலியுறுத்தப்பட்டது. திலகருக்கு அரவிந்தர் முழு ஆதரவு அளித்தார். இவர்கள் காரணமாக தேசீய காங்கிரஸ் பிளவுபட்டது. திலகருடன் சேர்ந்து சுயராஜ்யம் எனது பிறப்புரிமை என இவரும் முதலில் குரல் கொடுத்தார்.

அலிப்பூர் சதி வழக்கில் 1908ல் இவர் கைது செய்யப்பட்டிருந்தார். அப்போது ஆன்மீக விழிப்பு ஏற்பட்டது. சதி வழக்கில் விடுதலை செய்யப் பட்ட இவரை மீண்டும் கைது செய்யப் போலீசார் முயன்றார். ஆனால் அவர்களுக்கு அகப்படாமல் தப்பி அப்போது பிரெஞ்சு ஆட்சியிலிருந்த புதுச்சேரிக்கு சென்று அங்கேயே தங்கி விட்டார்.

அங்கு யோகத்தில் ஈடுபட்டு ஆன்மீகத்துறையில் இவர் இறங்கி விட்டார். இன்று இவருடைய அரவிந்த ஆசிரமம் உலகப்புகழ் பெற்று விட்டது.




# யார் தகுந்தவன்?

கலிங்க மன்னனின் இரு புதல்வர்கள் வீரசிம்மனும் ராஜசிம்மனும் ஆவர். இருவரும் வளர்ந்து இளைஞர்களாயினர். அவர்களில் ஒருவனைத் தேர்ந்தெடுத்து நாட்டை ஆளும் அரசனாக்க கலிங்க மன்னன் எண்ணினான். அரசனாக நல்ல தோற்றமும் உடற்கட்டும் இருக்க வேண்டும் என எண்ணி அவன் அதைத் தன் மைந்தர்களிடம் கூறி "உங்களுக்கு இரண்டு வருடகால அவகாசம் தருகிறேன். அதற்குள் நீங்கள் நல்ல உடற்கட்டு பெற்று வர வேண்டும். நீங்கள் இம் முயற்சியில் உங்களை அரச குமாரர்கள் என்று தெரிவித்துக் கொள்ளக் கூடாது" என்றான்.

இரு அரசகுமாரர்கள் தம் தந்தை கூறியபடி நடப்பதாகக் கூறிச் சென்றனர். வீரசிம்மன் அந்நாட்டிலேயே பெயர் பெற்றபயில்வானான பலசேனனைக் கண்டு அவனது சீடனாகி மற்போரில் பயிற்சி பெற்று வந்ததோடு தினமும் தேகப்பயிற்சி செய்து வந்தான். அவன் தன்னை இன்னானெனத் தெரிவிக்கவில்லை. அவனுக்கு அது கஷ்டமாக இருந்தாலும் பொறுத்துக் கொண்டு பலசேனன் கூறியபடி செய்து வரவே அவனது உடல் கட்டுமஸ்தாக ஆகியது.

ராஜசிம்மன் தன் அண்ணன் பலசேனனிடம் சென்றது கண்டு அங்கு போகாமல் தொலை தூரத்திலுள்ள ஒரு சிறு கிராமத்திற்குப் போனான். அந்த கிராமத்து வயல்களில் பயிர்கள் சரியாக விளையவில்லை. விவசாயம் செய்யப் போதிய தண்ணீர் இல்லை. ஊருக்கு வரவும் ஊருக்குள்ளும் சரியான பாதைகள் இல்லை. ஊரில் எங்கு பார்த்தாலும் தரித்திரம் தாண்டவமாடிக் கொண்டிருந்தது.

சாதாரணக் குடிமகன் போல அங்கு சென்ற ராஜசிம்மன் அந்த ஊரின்

சுதா கிருஷ்ணசாமி

பரிதாப நிலையைக் கண்டான். அவன் அந்த ஊர் கிராம அதிகாரியைக் கண்டு ''நீங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து வேலை செய்தால் இந்த கிராமத்தின் சீர்கெட்ட நிலையை நேராக்கலாம்'' என்றான். கிராம அதிகாரியோ அவன் கூறியதைக் கேட்டு ஏளனமாகச் சிரித்து ''ஐயா! சீர்திருத்தக்காரரே! பேசாமல் உன் வேலையைப் பார்த்துக் கொண்டு உன் வழியே போ'' என்றான்.

அப்போது ராஜசிம்மன் தான் யார் என்பதை அவனிடம் கூறவே அந்த அதிகாரி பயந்து ஊராரை எல்லாம் உடனே ஓரிடத்தில் கூட்டினான். அவர்களிடம் ராஜசிம்மனைக் காட்டி ''இவர் அரசகுமாரர் ராஜசிம்மன். உங்களைக் காண வந்திருக்கிறார்'' என்றான் ராஜசிம்மனும் அந்த கிராமத்தின் முன்னேற்றத்திற்கான பல வழிகளைக் கூறினான். ஒரு கிழவன் எழுந்து ''இந்த கிராமத்திற்கு நீண்ட காலமாக ஒரு சாபம் இருக்கிறதே'' எனவே ராஜசிம்மனும் ''அந்த சாபம் போய் விட்டதால்தான் நான் இங்கு வந்தேன். நீங்கள் எல்லோரும் நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நடக்கவேண்டும். அதனால் உங்களுக்கு நன்மையே ஏற்படும். என் சொற்படி நடக்காதவர்களைக் கடுமையாகதண்டிப்பேன்'' என்றான்.

அவன் கூறியதைக் கேட்டு சிலர் உற்சாகத்துடன் அவன் சொற்படி நடப்பதாகக் கூறினார்கள். சிலர் பயத்தால் அவன் கூறியபடி நடக்கத்தயாரானார்கள். இவ்வாறு அந்த கிராம மக்கள் யாவரும் அவன் சொல்வதைச் செய்யலானார்கள். அவன் கூறியபடி ஏரிக்கரையை பலப்படுத்தி ஒழுங்காக்கினார்கள். வயல்களில் கிணறுகளை வெட்டினார்கள். செடிகளை நட்டார்கள். இவற்றால் முதலாவது ஆண்டில் விளைச்சலில் நல்ல மாறுதல் ஏற்பட்டது. ஏரியிலும் கிணறுகளிலும் விவசாயத்திற்கு வேண்டிய நீர் இருந்தது.

அடுத்த ஆண்டில் செடிகள் வளர்ந்து



மரங்களாயின. மக்கள் விவசாயத்தில் முனைந்து ஈடுபடவே அமோக விளைச்சல் ஏற்பட்டது. மக்கள் கைகட்டி சோம்பேறிகளாக இராமல் சுறுசுறுப்புடன் செயல்பட்டார்கள். ராஜசிம்மனும் அவர்களோடு சேர்ந்து வேலை செய்து கிராமத்துப் பாதைகளையும் சீராக்கினான். இவ்வாறு இரண்டு ஆண்டுகள் கழிந்தன.

ராஜசிம்மன் கிராம மக்களிடம் விடை பெற்றுக் கொண்டு தலை நகருக்கு வந்தான். வீரசிம்மன் ஓராண்டு முடிந்ததுமே பலசேனனிடம் விடை பெற்றுக் கொண்டு தலை நகருக்கு வந்து விட்டான். ராஜ சிம்மன் வந்ததும் கலிங்க மன்னன் தன் இருபுதல்வர்களையும் அழைத்து பார்த்தான். இருவரின் உடல்களும் கட்டு மஸ்தாகவே இருந்தன. ஆனால் ராஜ சிம்மனின் நிறம் சற்று குறைவானதோஎன அவன் எண்ணினான்.

இரு அரச குமாரர்கள் தாம் செய்ததை விவரித்தார்கள். அப்போது வீரசிம்மன் ''நான் இன்னார் என்பதைத் தெரிவிக்காமல் ஒரே வருடத்தில் என் உடல்கட்டை வளர்த்துப் பொலிவுபெற வைத்துள்ளேன். இவனோ இரண்டு ஆண்டுகள் கழித்து சற்று நிறம் மங்கிய உடலுடன் வந்திருக்கிறான். எனவே எனக்குத்தான் அரசுபட்டம்கட்ட வேண்டும்'' என்றான்.

அது கேட்டு கலிங்க மன்னன் சிரித்து ''மன்னன் மக்களுக்காகப் பாடுபட வேண்டும். எதையும் தனக்காகச் செய்து கொள்ளாமல் மக்களுக்காகச் செய்ய வேண்டும். உடற்கட்டு மன்னனுக்கு வேண்டியதுதான். அது மட்டும் இருப்பதால் மன்னனாக நீ தகுதி பெற்று விட்டாய் எனக்கூற முடியாது. நீ மன்னனாக வேண்டுமென்று எண்ணியே உன் உடலைக் கட்டுமஸ்துள்ளதாக வைத்துக் கொண்டுள்ளாய். ராஜசிம்மன் தன்னலம் கருதாமல் மக்களுக்காக உழைத்து அவர்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்தியுள்ளான். எனவே ராஜசிம்மன் மன்னனாகட்டும். வீரசிம்மா. நீ நாட்டின் சேனாதிபதியாக இருந்து நாட்டை காத்து வா'' எனத் தன் முடிவைக் கூறினான்.

இரு அரச குமாரர்களும் அந்த முடிவை மகிழ்ச்சியுடன் ஏற்றனர்.






[புதைந்து கிடந்த தங்க சிம்மாசனத்தை எடுத்து வந்து தர்பார் மண்டபத்தில் வைத்து இளவரசன் விஜயதத்தனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அதைக் காண யாவரும் கூடினர். விஜயதத்தன் சிம்மாசனத்தில் அமர்வதற்கு அதன் முதல் படியில் கால் வைக்கவே அங்கிருந்த சத்திய சக்திப் பதுமை தான் கூறும் கதையைக் கேட்டு விட்டு அது பற்றித் தான் கேட்கும் கேள்விகளுக்குச் சரியான பதில்களைக் கூறினாலே அடுத்தபடி மீது கால் வைக்கலாம் என்று சொல்லிக் கதையைச் சொன்னது. அதன்பின் அது கேள்விகளைக் கேட்கவே, விஜயதத்தன் சரியான பதில்களைக் கூறிவிட்டு இரண்டாவது படியில் கால் வைத்தான். அங்கிருந்த தர்மசக்திப் பதுமை ஒரு கதை கூறலாயிற்று. அப்போது-]

அன்றிரவு குருவைய்யனின் உதவியுடன் மலயத்துவஜன் வஜ்ஜிரகீர்த்தியின் படுக்கை அறைக்குள் சென்றான். அங்கு தூங்கிக் கொண்டிருந்த வஜ்ஜிர கீர்த்தியை அவன் உலுக்கி எழுப்பி ''அடே! நீ தூங்கிக் கொண்டிருந்த என் தந்தையைக் கொன்று எம் நாட்டை அபகரித்தாய். இப்போது நான் உன்னை எழுப்பிக் கொல்கிறேன்'' என்று கூறித் தன் வாளால் அவனது மார்பில் குத்தினான். மறு கணமே வஜ்ஜிரகீர்த்தி இறந்து போனான்.

அதே சமயத்தில் வீரண்ணனின் உதவியுடன் துரோகியான படைத் தலைவன் கந்தர்ப்பனின் மாளிகைக்குள் ஆண் வேடத்தில் புகுந்து சாலினி அவனது அறைக்குள் சென்றாள். தூங்கிக் கொண்டிருந்த அவனை எழுப்பி சட்டென விஷ ஊசியை அவனது உடலில்



குத்தினாள். அடுத்த வினாடியே அந்த துரோகி மடிந்தான்.

மறுநாள் காலை இச்செய்தி தலைநகர் முழுவதும் பரவியது. சுவர்ணகிரி மக்கள் தம் இளவரசன் திரும்பி வந்து துரோகிகளைக் கொன்றுவிட்டு நாட்டின் அரசனானது கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தார்கள்.

மன்னனானபின் மலயத்துவஜன் குருவைய்யனுக்கு ஏராளமான தங்க நாணயங்களைக் கொடுத்து அனுப்பி விட்டான். பிறகு வீரண்ணனை அழைத்து ''கந்தர்ப்பனின் மெய் காவலாளியாக நீ இருந்ததால் அவனது துரோகபுத்தியில் சிறிது உன்னிடம் ஒட்டிக் கொண்டுள்ளது. விஷபூச்சி போலுள்ள உன்னை நான் கொல்லாமல் விட்டு வைப்பது நீ எனக்குச் செய்த உதவியின் காரணத்தால் தான். உன் போன்றவர்கள் பொறுப்பான பதவிகளில் இருக்கக் கூடாது. எனவே இன்று முதல் அரண்மனைப் பூங்காவில் செடிகளிடையேயுள்ள களைகளை எடுத்தெறியும் வேலையாளாகத்தான் பணிபுரிய வேண்டும்'' எனக் கட்டளை இட்டான்.

இதன் பிறகு சுகேதுவையும் அவனது குடும்பத்தினரையும் அழைத்து தன்னோடு விருந்து உண்ணச் செய்தான். அவனுக்கு ஏராளமான பரிசுகளை அளித்து ''இனிமேல் நீங்கள் அனைவரும் என் குடும்பத்தவராக ஆகிவிட்டீர்கள். எனவே அரண்மனையில் நடக்கும் எல்லா விசேஷங்களிலும் நீங்கள் தவறாமல் கலந்து கொள்ள வேண்டும்'' என்று கூறி விடை கொடுத்து அனுப்பினான்.

நாலைந்து நாட்களுக்குப் பின் மலயத்துவஜன் வேடுவர் மன்னனான சிம்மகுப்தனை மரியாதையுடன் வரவழைத்து அவனது மகள் சாலினியைத் தனக்கு விவாகம் செய்து கொடுக்க வேண்டும் என்று வேண்டினான். அது கேட்டு சிம்மகுப்தனும் சாலினியும் மகிழ்ந்து போயினர். அந்த விவாகமும் சிறப்பாக நடைபெற்றது.

இக்கதையைக் கூறிய தர்மசக்திப் பதுமை ''மன்னனாகப் போகிறவனே! சாலினியை விட்டு

விட்டு மலயத்துவஜன் மற்ற மூவருக்கும் பரிசளித்தது சரியான வகையிலா? சாலினியைப் போல் இம் மூவரும் உதவியவர்கள் தாமே. ஒருவனுக்கு தங்க நாணயங் களைக் கொடுத்து அனுப்பினான். மற்றவனுக்கு உயிர்ப்பிச்சை அளித்து மூன்றாந்தர வேலையைக் கொடுத்தான். இன்னொருவனுக்கு ராஜோபசாரம் செய்தான். இது எப்படி நியாயமாகும்? நீ மலயத்து வஜனின் நிலையில் இருந்தால் என்ன செய்வாய்? இக் கேள்வி களுக்குச் சரியான பதில் கூறா விட்டால் இந்தத் தங்க சிம்மாசனம் மாயமாய் மறைந்து போய் விடும்'' என்றது.



அப்போது விஜயதத்தன் ''தர்ம சக்தியே! இந்தக் கதையில் மலயத்துவஜன் மூவரிடமும் பாகு பாடு காட்டியது அம் மூவரின் நடத் தையின் நிலையின் அடிப் படை யில்தான். மூவரின் வீரண்ணனின் நிலை கீழ்த்தரம். குருவைய்யனின் நிலை நடுத்தரம். சுகேதனின் நிலை உயர்தரம். மன்னன் யாரையாவது கௌரவிக்கவோ அல்லது தண்டிக் கவோ நினைத்தால் அவனது செயல்பாட்டின் நிலையின் அடிப் படையில்தான் இருக்கும். கீழ்த் தரத்தவரை தண்டிப்பதும், நடுத் தரத்தவரை மன்னிப்பதும் உயர் தரத்தவரை அன்புடன் ஆதரிப் பதும் தான் முறையானதாகும். இந்த செயல்பாட்டு நிலைகளை அறிந்து கொள்ளும் சக்தி ஒரு மன்னனுக்கு இருக்க வேண்டும். இந்தத் திறன் மலயத்துவஜனிடம் இருந்தது. அதனால் தான் வீரண்ண னின் கீழ் தரமான துரோக புத்தியை அவன் அறிந்து கொண்டான். அதனால்தான் அவனது மனைவி மக்களைச் சிறைப்படுத்தி, பயத் தால் அவனை உதவி புரியும்படி செய்து கந்தர்ப்பனை சாலினியைக் கொண்டு ஒழித்தான். இப்படிப் பட்டவனை உயர் பதவியில் இருக்க விடக் கூடாது என்றும் தன் கண்காணிப்பிலேயே வைத்திருக்க வேண்டும் என்றும் நினைத்தே அவனை உயர் பதவியிலிருந்து நீக்கி தண்டனை அளிப்பது போல மிக மிகத் தாழ்வான வேலையைக்



சேர்ந்தவர்கள். அவர்கள் மிகுந்த ராஜபக்தியும் தேசபக்தியும் கொண்டவர்கள். இப்படிப் பட்டவர்களை அணைத்து ஆதரித்து கௌரவப் படுத்திக் கொண்டிருப்பதுதான் சரியானதாகும். இதை உணர்ந்தே மலயத்தவஜன் சுகேதுவையும் அவனது குடும்பத்தவரையும் அரண்மனையில் நடக்கும் எல்லா கொண்டாட்டங்களிலும், விழாக் களிலும் கலந்து கொள்ள அழைத் தான். இவ்வாறு அவன் அக் குடும்பத்தவருடன் நெருங்கிய உறவு கொண்டது மிகவும் சரியே. நான் மலயத்துவஜனின் நிலையில் இருந்திருந்தாலும் அவன் செய்தது போலத் தான் செய்திருப்பேன்.''

கொடுத்தான். இது சரியே'' என்று கூறித் தொடர்ந்தான்.

''அடுத்து குருவைய்யனை எடுத்துக் கொண்டால் அவன் பணம் என்றால் வாயைப் பிளப்பவன். யார் பணம் கொடுத்தாலும் எதையும் செய்பவன். அவனைப் போன்றவர் களால் மன்னவனுக்கு வீரண்ணனைப் போல ஆபத்து விளைவிக்க முடியாது. அதனால் தான் மலயத்து வஜன் அவனுக்குப் பணம் கொடுத்து எங்காவது போய் வாழும்படிக் கூறி அனுப்பி விட்டான். இப்படிச் செய்தது சரியே. அவனது நிலையில் நான் இருந்தாலும் அதையே தான் செய்திருப்பேன்.

மூன்றாவதான சுகேதுவும் அவன் மனைவியும் உயர்நிலையைச்

இவ்வாறு விஜயதத்தன் தனது கேள்விகளுக்குச் சரியான விடை களைக் கூறியதைக் கண்டு தர்ம சக்திப் பதுமை ''பேஷ்! பேஷ்!! இவ்வாறு நீ சரியான விடைகளைக் கூறி விட்டதால் நீ அடுத்த படியில் கால் வைக்கலாம்'' என்றது. அதைக் கேட்ட சபையோர் பலமாகக் கர ஒலி எழுப்பித் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். விஜயதத்தனும் அவர்களது வாழ்த் துக்களையும் பாராட்டுதல்களை யும் புன்னகையுடன் ஏற்று மூன்றாவது படியில் காலை வைத்தான்.

அப்போது மூன்றாவது படியில் நின்று கொண்டிருந்த நியாய சக்திப் பதுமை ''வர வேண்டும் வருங்கால

மன்னரே! நானும் மற்ற இரு பதுமைகள் கூறியதைப் போல ஒரு கதையைக் கூறி சில கேள்விகள் கேட்பேன். அவற்றிற்குச் சரியான விடைகளை நீ கூறிவிட்டால் இந்த சிம்மாசனத்தில் நீ அமரலாம். விடைகள் சரியாக இல்லாவிட்டால் இந்த சிம்மாசனம் மாயமாய் மறைந்து விடும்'' என எச்சரித்துக் கதை சொல்லலாயிற்று.

சுபத்திர நாட்டு மன்னன் நியாயவர்த்தனன் மகாவீரன். பலசாலியும் கூட. நேர்மையான சரியான தீர்ப்பு வழங்குபவன். சுபத்திர நாட்டின் அண்டை நாடான பௌமிய நாட்டு மன்னன் நியாய வர்த்தனனின் நண்பன். அவன் தன் மகன் குமாரகேதுவிற்குப் பட்டம் கட்ட நிச்சயித்து அவனிடம் ''மகனே! ஒரு மன்னன் நீதி தவறாமல் நியாயம் வழங்க வேண்டும். நம் அண்டை நாட்டு மன்னர் நியாய வர்த்தனர் நீதி தவறாதவர். நீ அவரிடம் சீடனாகக் கொஞ்ச காலம் இருந்து விட்டு வந்தால் உனக்கும் நல்லது, நம் நாட்டிற்கும் நல்லது'' என்றான்.

தன் தந்தையின் சொற்படி குமாரகேது சுபத்திர நாட்டிற்குச் சென்று நியாயவர்த்தன மன்னனைக் கண்டான். அந்த மன்னனும் குமாரகேதுவை மகிழ்ச்சியுடன் வரவேற்று ''நான் எது நியாயமானது என நினைக்கிறேனோ அதையே தீர்ப்பாக வழங்குகிறேன். நாடு



என்பது ஒரு பெரிய குடும்பம் போன்றது. மன்னன் அக் குடும்பத்தின் தலைவன். குடும்பத்தில் மூத்தவர்களுக்கும் இளைவர்களுக்கும் இடையில் சண்டை சச்சரவுகள் மூண்டால் அவற்றைத் தீர்த்து வைப்பது குடும்பத் தலைவனின் கடமை. இது போலத் தான் நாட்டின் நிலையும். நாட்டு மக்களிடையே சண்டை, சச்சரவு, பூசல் என ஏற்பட்டால் மன்னன் தான் அவற்றைத் தீர்த்து வைக்க வேண்டும். இப்படிச் செய்வதில் நியாயம் இருக்க வேண்டும். அப்போதுதான் அதில் ஒற்றுமை நிலவும். குடும்பமாகிய நாட்டின் நலனும் இருக்கும். மக்கள் மன்னனின் தீர்ப்பு நியாயமானதே



என எண்ணி விட்டால் அதுவே நாட்டிற்குப் பெரும் பலம். நாளை நீ என்னுடன் தர்பாருக்கு வா. அங்கு வழக்குகளில் நான் வழங்கும் தீர்ப்புகளைப் பரிசீலித்துப் பார். அப்போது நான் சொன்னது உனக்கு நன்கு விளங்கும்'' என்றான்.

மறுநாள் குமாரகேது நியாயவர்த்தனனுடன் தர்பாருக்குச் சென்றான். அவன் நியாயவர்த்தனனுக்குச் சமீபத்தில் அமர்ந்து அந்த மன்னன் விசாரிக்கும் வழக்குகளை உன்னிப்புடன் கவனிக்கலானான். அன்றைய வழக்குகள் மூன்று. முதலாவது ஒரு சாதாரணப்பட்ட விவசாயியினுடையது. அவன் பெயர் வீரநந்தன். அவன் தன் நண்பன் சந்திரன் என்பவன் மீது வழக்குத் தொடர்ந்திருந்தான்.

வாதியான வீரநந்தன் மன்னனை வணங்கி ''அரசே! இந்த சந்திரனும் நானும் சிறுவயதிலிருந்தே நண்பர்கள். எங்களுக்குத் திருமணம் ஆகுமுன்பே நாங்கள் பிற்காலத்தில் சம்மந்திகளாக ஆவது என்றும் ஒருவருக்குப் பிறக்கும் ஆண் குழந்தைக்கு மற்றவருக்குப் பிறக்கும் பெண் குழந்தையைத் திருமணம் செய்து வைப்பது என்றும் தீர்மானித்துக் கொண்டோம். எனக்கு முதலில் திருமணமாகி ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதன் பின் சந்திரனுக்குத் திருமணமாகவே அவனுக்கு ஒரு பெண் குழந்தையும் பிறந்தது. எமது மனைவிகளும் அக்குழந்தைகள் வளர்ந்து பெரியவர்கள் ஆனதும் அவர்கள் இருவருக்கும் திருமணம் செய்து வைக்கச் சம்மதித்தார்கள். ஆனால் பெண் குழந்தை பிறந்த மறுவருடமே சந்திரனுக்கு அதிர்ஷ்டம் அடித்தது. அவனுக்கு அந்தப் பெண் குழந்தைக்குப் பிறகு வேறு பெண் குழந்தை எதுவும் பிறக்கவில்லை. சந்திரனும் தன் நான்கு ஏக்கர் நிலத்தைப் பத்து ஏக்கர் நிலமாகப் பெருக்கிக் கொண்டு பெரும் பணக்காரனாகி விட்டான்'' என்று கூறி மேலும் தொடர்ந்தான்.



நிபுணர்களின் ஆலோசனைகளைக் கேட்டு விட்டு அதன்படி நடக்காதவன் சாஸ்திரங்களை நன்கு படித்து விட்டு அதன்படி நடக்க மறந்து போன பண்டிதருக்குச் சமமாவான்.

*- சுக்கிராச்சாரியார்*

''என் நிலையே முற்றிலும் நேர் மாறாக ஆகி விட்டது. எனக்கு முதல் ஆண் குழந்தை பிறந்த பிறகு மேலும் ஐந்து ஆண் குழந்தைகள் பிறந்து விட்டன. இக்குடும்பத்தைச் சமாளிப்பது மிகவும் சிரமமாகி விட்டது. இரண்டு வேளை சாப்பாட்டிற்கே திண்டாட வேண்டியதாயிற்று. இப்படி வறுமையில் வாடும் என்னை சந்திரனும் அவன் மனைவியும் ஒதுக்கலானார்கள். இபோதோ தம் மகளை என் மகனுக்குத் திருமணம் செய்து வைக்க முடியாது என்று கூறுகிறார்கள். சந்திரனிடம் நிறையப் பணம் இருப்பது கண்டு என் உறவினர்கள் கூட அவன் கூறுவதே சரி என்று தாளம் போடுகிறார்கள். எப்போதோ சிறு வயதில் பேசிக் கொண்டபடியெல்லாம் இப்போது நடக்க முடியாது தான் என்கிறார்கள். அரசே! இதுதான் என் வழக்கு சந்திரன் தான் அளித்த வாக்கை மீறி விட்டான். தாங்கள் இந்த வழக்கை விசாரித்துத் தக்க நியாயம் வழங்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.''

இவ்வாறு வீரநந்தன் தன் வழக்கை விளக்கிக் கூறி முடிக்கவும் அவன் சொன்னதை எல்லாம் கவனமாகக் கேட்ட மன்னன் நியாயவர்த்தனன் சந்திரனைப் பார்த்து ''நீ என்ன சொல்ல விரும்புகிறாய்? இந்த வீரநந்தன் கூறியது எல்லாம் உண்மை தானா?'' என்று கேட்டான்.

(தொடரும்)



ஒரு உயரிய நாகரீகத்தின் பல கட்டங்கள்
பரம்பரை பரம்பரையாக உண்மையைக் காண ஆய்வு

## 7. குலகோத்திரம் அறியாத முனிவர்

சோமநாதரின் முன் உட்கார்ந்திருந்து சேகரும் சியாமளாவும் அவரிடம் நல்ல கதை ஒன்றைக் கூறும்படி வேண்டினார்கள். அவரும் ''முன்பு தண்டகாரண்யம் பற்றி கதை கூறினேன். பழங்காலத்தில் அடர்ந்த காடுகளில் தான் குருகுலங்கள் இருந்தன. இதற்குக் காரணம் அவற்றை நடத்தி வந்தவர்கள் முனிவர்களே. இந்த குருகுலங்கள் நதிக்கரைகளிலோ செழிப்பான இடங்களிலோ அல்லது அமைதி நிலவும் இடங்களிலோ அமைக்கப்பட்டு வந்தன'' என்றார்.

சேகர் அது கேட்டு ''ஆகா! இப்படிப் பட்ட இடங்கள் எவ்வளவு அழகானவை! அங்கு நாம் விளையாடலாமே'' என்றான். சியாமளாவும் ''ஆமாம். பூப்பந்து கால்பந்து, கிரிக்கெட் போன்றவற்றை அங்குள்ள மாணவர்கள் விளையாடி இருப்பார்கள்'' என்றாள் சிரித்தவாறே.

சோமநாதரும் பலமாகச் சிரித்து ''அந்த நாட்களில் இந்த விளையாட்டுகள் எல்லாம் கிடையாது. ஆனால் உடல் வளர்ச்சிக்கான வேறு பல விளையாட்டுகள் உண்டு. மல்யுத்தம், நீச்சல் போட்டி, ஓட்டப்பந்தயம், மரங்கள் ஏறித் தாவுதல் போன்றவை சுவாசத்தை நேர்படுத்துபவை. இவற்றால் உடற் கட்டு தளராமல் இருக்கும். சடுகுடு கிளித்தட்டு போன்ற விளையாட்டுகள் இன்றும் நம்மிடையே உள்ளன. அக்காலத்து க்ஷத்திரியர்களுக்கு அம்பு எய்தல், வாட்போர், சிலம்பம் ஆகியன கண்டிப்பாகத் தெரிந்திருக்க வேண்டும்'' என்றார்.

அப்போது சேகர் '' தாத்தா! இந்த பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு இனவேறுபாடுகள் எப்போது செய்யப்பட்டன?



பாரதீயன்





பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே செய்யப்பட்டனவா?'' என்று கேட்டான். சோமநாதரும்'' இதன் ஆரம்பம் எப்போது என்று சரியாகச் சொல்ல முடியாது. அதற்கான ஆதாரங்கள் இல்லை..ஆனால் ஒன்றைச் சொல்லலாம். மனிதனின் இயல்பிற்கும் செயலுக்கும் ஏற்ப அவனுக்குத் தொழிலில் நாட்டம் ஏற்படச் செய்ய வேண்டுமென்ற நோக்கத்தில் தான் இந்தப் பாகுபாடுகள் பொதுவாகச் செய்யப்பட்டன. வீரச் செயல்கள் செய்ய விரும்புவோர் எப்போது அவற்றைச் செய்வது என்று துடித்துக் கொண்டே இருப்பார்கள். இவர்களைத் தான் க்ஷத்திரியர்கள் என்றார்கள். வியாபாரத்தில் ஈடுபாடு கொண்டவர்களை வைசியர்கள் என்றார்கள். விவசாயத்தில் ஆர்வம் காட்டி உடல் உழைப்பால் தம் திறனைக் காட்டியவர்களை சூத்திரர்கள் என்றார்கள். கல்வி, அறிவு, புலமை, தியானம் முதலியவற்றில் தேர்ச்சி பெற்றவர்களை பிராம்மணர்கள் என்றனர். அக்காலத்தில் இந்த நான்கு பிரிவினர்களும் சமமானவர்களாகவே கருதப்பட்டார்கள். இன்னார் இன்ன தொழிலைத்தான் செய்ய வேண்டுமென்ற கட்டாயம் எதுவும் இருக்கவில்லை. இந்த நான்கு பிரிவினர்களுக்கும் எந்த பிரிவின்



வேலையையும் செய்யலாம் என்ற சுதந்திரம் இருந்தது. நன்கு யோசித்துப் பார்த்தால் இவை பரம்பரை பரம்பரையாகப் பிறப்பால் வருவது அல்ல என்பது நன்கு தெரியவரும்'' என்றார்.

அப்போது சேகர் ''ஆனால் பிற்காலத்தில் இவை எப்படிப் பரம்பரை பரம்பரையாகப் பிறப்பால் ஏற்பட்டது என எவ்வாறு நடைமுறையில் வந்தன?'' என்று கேட்டான். சோமநாதரும் ''இது மனிதன் தன் சுயதேவைக்காகச் செய்து கொண்ட ஏற்பாடு. ஒரு தந்தை ஒரு துறையில் திறன்பெற்றிருந்தால் தன் மகனும்

அத்துறையில் தன்னைப் போலத் திறன் பெற வேண்டுமென எண்ணி தான் செய்த தொழிலையே தன் மகனுக்கும் கற்பிக்கலானான். இப்படித்தான் இந் நான்கு பிரிவினரும் தாம் செய்யும் தொழில்களை பரம்பரை பரம்



பரையாய் பிறப்பால் செய்ய உரிமை பெற்றுவிட்டதாக நினைத்து விட்டார் கள்'' என்றார்.

அப்போது சேகர் ''முன்காலத்தில் ஒரு தொழிலைச் செய்தவர் வேறு தொழிலுக்கு மாறியதாக ஏதாவது நிகழ்ச்சி உண்டா? என்று கேட்டான். சோமநாதரும்'' ஆமாம். இருக்கிறது. குலம் கோத்திரம் தெரியாமலேயே ஒருவர் இருந்து முனிவரானார். அவரது கதையைச் சொல்கிறேன், கேளுங்கள்'' என்று கூறி கதை சொல்லலானார்.

''ஒரு காட்டினருகே ஓடும் நதியின் கரையில் ஒரு ஏழைப் பெண்ணும் அவளது மகனான சிறுவனும் வசித்து வந்தார்கள். நதியின் மறுகரையில் கௌதம முனிவரின் குருகுலம் இருந்தது. அந்த ஏழைச் சிறுவன் நதியில் குளிக்கும்போது குருகுலத்தின் மாணவர்கள் நதியில் குளிப்பதையும் அவர்களுக்கு கௌதமர் காயத்திரி, சூரிய நமஸ்காரம் போன்ற மந்திரங்கள் கற்றுக் கொடுப்பதையும் பார்த்தான். அவன் தன் தாயாரிடம் தானும் குருகுலத்தில் சேர்ந்து படிக்க விரும்பு வதாகக் கூறவே அவளும் ''கௌதமர் உன்னை மாணவனாக ஏற்றுக் கொண் டால் தாராளமாகப் படி'' என்றாள்.

அச்சிறுவன் மறுநாளே கௌதம முனிவரைக் கண்டு அவரது மாணவ னாக ஆக விரும்புவதாகக் கூறினான். அதுகேட்டு அவர் ''உன்குலம் என்ன?'' என்று கேட்டார். அவனும் ''எனக்குத் தெரியாது. என் அம்மாவிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

மறுநாள் அவன் கௌதமரைச் கண்டு ''என் குலம் யாதுஎன்றும் என் தந்தை யாரென்றும் தனக்கும் தெரியாது என்று என் தாயார் கூறுகிறாள்'' என்றான். அவரும் ''நீ போய் இன்னொருதடவை அவளிடம் கேட்டுவா'' எனவே அச்சிறுவனும் அன்று போய் விட்டு

மறுநாள் கௌதமரைக் கண்டான். கௌதமரிடம் ''என் தாயார் பல வீடுகளில் வேலை செய்தாளாம். ஒரு வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த ஒரு வேலையாளை மணந்து கொண்டாளாம். ஒரு விபத்தில் அந்த வேலைக்காரனும் என் எஜமானனும் இறந்துவிட்டார்களாம். அப்போது என் தாயார் மட்டும் தப்பினாள். நான் சில தினங்களில் பிறந்தேனாம். இங்கே வந்து என் தாயார் குடிசைப் போட்டுக் கொண்டு காட்டில் கிடைக்கும் பழங் களையும் கட்டைகளையும் எடுத்து வந்து விற்று என்னை வளர்த்து வருகிறாள்'' என்றாள்.

அப்போது கௌதமர் ''உன் குலம் தெரிந்துவிட்டது. நீ பிராம்மணன்'' என்றார். அப்போது அவரருகே இருந்த ஒரு சீடன் ''குருவே! நீங்கள் இதை எவ்வாறு அறிந்து கொண்டீர்கள்''? என்று கேட்டான்.

''பிராம்மணன் எப்போதும் உண்மையைப் பேசுபவன். எந்நிலை யிலும் பயப்படாமல் அவன் உண்மை யைக் கூறுவான் இது தான் அவனது லட்சணம். இவனும் இவனது தாயும் தயங்காமல் உண்மையைக் கூறினார் கள். எனவே உண்மையான பிராம் மணர்கள் இவர்கள்தாம்'' என்றார்.

அச்சிறுவனுக்கு அவனது தாயார் என்ன பெயர் வைத்தாள் என்பது தெரியவில்லை. ஆனால் கௌதம முனிவர், அவனுக்கு சத்தியகாமன் என்று பெயர் வைத்தார். அவனது தாயாரின் பெயர் ஜாபாலி. அதனால் அவன் பிற்காலத்தில் சத்தியகாம ஜாபாலி என்ற பெயருடன் புகழ் பெற்றான். முனிவர்களுக்கு குலம் என்பதில்லை. அதற்கெல்லாம் அப்பாற் பட்டவர்கள் முனிவர்கள்''.

''நீங்கள் கூறியதில் பலவிஷயங் களைத் தெரிந்து கொண்டோம்'' என்றார்கள் சேகரும் சியாமளாவும்.





# படையை விரட்டிய பாட்டு

வேல நாட்டில் ஒரு தம்பதிகளுக்கு மணமாகிப் பலவருடங்களுக்குப் பின் ஒரு குழந்தை பிறந்தது. பிறந்த போது அக்குழந்தை எல்லாக் குழந்தைகளைப் போல குவா குவா என்று கத்தாமல் ஏழு எருமை மாடுகள் சேர்ந்துக் கத்தினால் எப்படிக் கேட்க சகிக்க முடியாமல் இருக்குமோ அத்தகைய பயங்கரக் கட்டைக் குரலில் கத்தியது. அது கேட்டு அதன் தாய் தந்தையர் அதிர்ந்து போயினர். அவனது குரலைக் கேட்ட அவ்வூரார். அவனுக்கு மகிஷகண்டன் என்று பெயரிட்டனர். மகிஷம் என்றால் எருமை என்றும் கண்டம் என்றால் குரல் என்றும் பொருள்.

ஐந்து வயதானதும் மகிஷகண்டனை அவனது தந்தை உள்ளூர் பள்ளிக் கூடத்தில் கொண்டு போய்ச் சேர்த்தான். முதல் நாளிலேயே அவனது குரலைக் கேட்ட வகுப்பு மாணவர்கள் பயந்து நடுநடுங்கினார்கள். ஒரு சில மாணவர்களுக்குக் காய்ச்சலே கண்டுவிட்டது. ஆசிரியராலும் அவனது குரலைக் கேட்டுச் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. அதனால் அவர் மகிஷகண்டனின் தந்தையை அழைத்து ''நாளை முதல் உன் மகனைப் பள்ளிக்கு அனுப்பாதே. மாணவர்கள் அவனது குரலைக் கேட்டு நடுங்கி ஓடுகிறார்கள். அவன் இங்கே படிக்க வந்தால் பள்ளிக்கு ஒரு மாணவன் கூட வரமாட்டான். அப்போது பள்ளிக் கூடத்தையே மூடிவிட வேண்டி வரும். என் உத்தியோகமும் போய் விடும்'' என்று கெஞ்சாத குறையாகக் கூறினார்.

மகிஷகண்டனை மறுநாள் முதல் அவனது தந்தை பள்ளிக்கு அனுப்பவில்லை. அவனை என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்

- சிவனார் செல்வன்

கையில் அவ்வூருக்கு யோகானந்தர் என்ற சன்னியாசி வந்தார். அவரிடம் தன் மகனை அழைத்துப்போய் அவன் ''சுவாமி! இவன் எனது ஒரே அருமை மகன் மகிஷகண்டன். இவனுக்கு சகிக்கமுடியாத குரலைக் கடவுள் கொடுத்துவிட்டார். பள்ளிக்கூடத்தில் இவனைச் சேர்க்க முடியவில்லை. நீங்கள்தான் இவனுக்கு வழிகாட்ட வேண்டும்'' என்று வேண்டினான்.



யோகானந்தரும் மகிஷகண்டனின் கைரேகையைப் பார்த்துவிட்டு ''இவனுக்கு இருபதாவது வயதில் நல்ல அதிர்ஷ்டம் அடிக்கப் போகிறது. இவனது பாட்டால் ஒரு மாபெரும் திருப்பமே நாட்டில் நடக்கப் போகிறது. இவனுக்கு அப்போது ஏராளமாகப் பணம் கிடைக்கும்'' என்று கூறினார். இதைக் கேட்டு என்ன செய்வதெனத் தெரியாமல் தலையைச் சொறிந்து கொண்டே அவன் மகிஷகண்டனை அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்கு வந்தான்.

சில நாட்களாயின. அப்போது மகிஷகண்டனுக்குப் பாட்டு சொல்லிக் கொடுத்து இசைத் துறையில் அவனை முன்னுக்கு கொண்டு வருவது என்று அவனது தந்தை எண்ணினான். அதனால் அவன் மகிஷகண்டனை அழைத்துக் கொண்டு பிரபல சங்கீத வித்வானான மணிபாகவதரிடம் சென்றான். அவரிடம் ''ஐயா! இவனுக்கு இசைப் பயிற்சி அளியுங்கள். அதற்காக நீங்கள் எவ்வளவு பணம் கேட்டாலும் கொடுக்கிறேன்'' என்றான். மணிபாகவதரும் ஹம்சத்துவனி ராகத்தில் வாதாபி கணபதிம்' என்ற கீர்த்தனையைப் பாடிக் காட்டி'' எங்கே! நீ இதைப் பாடிக் காட்டு'' என்றார். மகிஷகண்டன் தன் குரலில் 'வா' என்று ஆரம்பித்தபோதே பாகவதர் அந்தக் குரலைக் கேட்கச் சகிக்காமல் தம் காதுகளைப் பொத்திக் கொண்டார்.

பாகவதர் தமக்கு வந்த கண்டத்திலிருந்து எப்படித்தப்புவது என்று யோசித்தார். அவருக்கு ஒரு வழி தோன்றியது உடனே அவர் மகிஷகண்டனிடம் இனிப்பாட வேண்டாம் என்று கூறிவிட்டு அவனது தந்தையிடம் ''பையனின்



குரல் பிரமாதமாக இருக்கிறது இவனுக்கு நான் கற்பிக்க வேண்டிய அவசியமே இல்லை. இவன் மன்னனின் தர்பாரில் பாடினால் நல்ல பரிசு கிடைக்கும்'' எனக் கூறி அவர்களை அனுப்பிவிட்டுத் தப்பித்துக் கொண்டார்!

பாகவதர் ஏன் அப்படிச் சொன்னார் என்பது மகிஷகண்டனின் தந்தைக்குப் புரிந்து விட்டது. அவன் தன் மகனிடம் ''உன் குரல் மேலும் மெருகு பெற நீ கொஞ்ச நாட்கள் தனியாக ஓரிடத்தில் உட்கார்ந்து சாதகம் செய். அதற்கு காடுதான் ஏற்ற இடம். ஒருவார சாதகத்திற்குப் பிறகு வீட்டிற்கு வா. உன்னை அரசனின் தர்பாருக்கு அழைத்துச் செல்கிறேன்'' என்றான். மகிஷகண்டனும் தன் தந்தை பின் சொற்படி காட்டிற்குச் சென்றான். அங்கு அவன் ஒரு பாறை மீது உட்கார்ந்து கொண்டு பாடத் தொடங்கினான். அப்போது மூலிகைககள் தேடி எடுத்துப் போக வந்த வைத்தியர் ஏகாம்பரம் மகிஷகண்டனைப் பார்த்து 'ஓ! நீயா பாடினாய்? யாரோ கந்தர்வன்தான் இங்கு வந்து பாடிக் கொண்டிருக்கிறானோ என்று எண்ணிவிட்டேன். இவ்வளவு குரல்வளம் கொண்ட நீ இப்போதே கிளம்பிப் போய் அரசரின் தர்பாரில் பாடி பரிசுகள் பெறு'' என்றார். அது கேட்டு மகிஷகண்டன் உடனே தலைநகருக்குக் கிளம்பினான்.

அப்போது அந்நாட்டு மன்னன் ஒரு பெரும் சங்கடத்தில் இருந்தான். அண்டை நாட்டு மன்னன் படை எடுத்து வருகிறான் என்ற செய்தி அவனைக் கலங்க வைத்தது. அவன் தன சேனாதிபதியுடன் கலந்து ஆலோசித்துக் கொண்டிருந்தான். அப்போது ஒரு காவலாளி வந்து ''அரசே! தங்களைக் காண மகிஷகண்டன் என்ற பாடகர் வந்திருக்கிறார். இங்கே அழைத்து வரலாமா?'' என்று கேட்டான்.

மன்னனும் சரியெனத் தலையை ஆட்டவே மகிஷகண்டன் மன்னன் முன் வந்து வணங்கினான். பிறகு அவன் பாட ஆரம்பிக்கவே மன்னன் பயந்து போனான். இடிபோன்ற அக்குரலைக் கேட்டு

அண்டை நாட்டு மன்னன் தான் தன் அரண்மனையைத் தாக்குகிறானோ என்று எண்ணி நடுங்கினான். ஆனால் சில நிமிடங்களுக்குப் பின் அந்தப் பேரொலியை உண்டாக்கிய வன் மகிஷகண்டன் தான் எனக் கண்டதும் அவன் மகிஷகண்டனின் நாக்கை அறுத்து எறியும்படித் தன் சேனாதிபதியிடம் கூறினான். ஆனால் மறுநிமிடமே தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டு ''இவனை நம் நாட்டில் வடபகுதி யிலுள்ள காட்டில் கொண்டுபோய் விட்டு விடு. அங்குள்ள ராட்சஸன் இவனைக் கொன்று விழுங்கி விடுவான்'' என்றான்.



சேனாதிபதியும் சில வீரர்களிடம் மகிஷகண்டனை காட்டில் கொண்டு போய்விட்டு வரும்படிக் கட்டளை இட்டான் வீரர்களும் அவனைத் தூக்கிக் கொண்டு போய் காட்டில் போட்டு விட்டு ஓடி வந்து விட்டார்கள். அப்போது தான் மகிஷகண்டனுக்குத் தன் குரல் இனிமையானது அல்ல என்றும் அதைக் கேட்டு எல்லோரும் பயந்து ஓடுகிறார்கள் என்றும் தெரிந்தது. அப்படியானால் ராட்சஸன் தன் னைப் பிடிக்க வந்தால் தன் குரலால் அவனை பயமுறுத்தி விரட்டிவிடு வது என்று அவன் தீர்மானித்துக் கொண்டான்.

அப்போது கையில் கல்கதை எடுத்துக் கொண்டு அங்கிருந்த ராட்சஸன் மகிஷகண்டனின் பக்கம் வந்து நின்று ''ஆகா! உயிருள்ள மனிதனா! இன்று எனக்கு நல்ல வேட்டை தான். இவனை ஓரே விழுங்கில் விழுங்கி விடுகிறேன்'' என்று அட்டகாசமாகச் சிரித்துக் கொண்டே கூறினான். மகிஷகண்ட னோ சற்றும் பயப்படாமல் உரத்த குரலில் பாடலானான். அதைக் கேட்டு ராட்சஸன் திடுக்கிட்டுத் தன் காதுகளைப் பொத்திக்கொண் டான். மகிஷகண்டனோ தொடர் ந்து பாடவே ராட்சஸனும் ''ஏய்! பாட்டை நிறுத்து. தலை வேதனை யாக இருக்கிறது'' என்று கத்தி னான். மகிஷகண்டனோ பாடு வதை நிறுத்தவில்லை. விடாமல் பாடிக் கொண்டே இருந்தான்.

அதைக் கேட்டுக் கொண்டு



ஒருவனுக்குத்தன்வீட்டில்தாயாரேதுணை. அயல்நாட்டில்அவன்கற்ற கல்வியே துணை, நோய்வாய்ப்பட்டவனுக்கு மருந்தேதுணை. இறக்கும் போது அவன் செய்த தர்மமே அவனுக்குத்துணை.

- கௌடில்யர்.

நின்று கொண்டிருக்க ராட்சஸனால் முடியவில்லை. கதையைத் தோளில் வைத்தவாறே அங்கிருந்து ஓட்டம் பிடித்தான். மகிஷகண்டனும் பாடிக் கொண்டே அவனைத் துரத்திக் கொண்டு ஓடினான். இச்சமயத்தில் தான் அண்டை நாட்டு மன்னன் தன் படையோடு அவ்வழியே வந்து கொண்டிருந்தான். அந்தப் படை மகிஷகண்டனின் பாட்டைக் கேட்டுப் பயந்து சிதறி நாலாபுறத்திலும் ஓடியது. ஒரு ராட்சஸன் வேறு கதையுடன் ஓடிவருதைக் கண்ட அண்டை நாட்டு மன்னன் தப்பினால் போதுமென்று அங்கிருந்து ஓடியே போய்விட்டான். ராட்சஸனோ அவனது படைவீரர்களை அடித்துக் கொன்றே தள்ளினான்.

இப்படி நடந்தது எல்லாம் ஒற்றர்கள் வாயிலாக அந்நாட்டு மன்னனுக்குத் தெரிந்தது. தன் நாட்டின் மீது படை எடுத்து வந்த அண்டை நாட்டு மன்னனையும் அவனது படையையும் விரட்டி தன் நாட்டைக் காத்தது மகிஷகண்டனின் பாட்டே என்று அவன் தெரிந்து கொண்டான். அவன் மகிஷகண்டனைத் தக்க மரியாதைகளுடன் தர்பாருக்கு அழைத்து ஏராளமான பரிசுகளை அளித்தான். அப்போது ''உனக்கு இன்று முதல் என் தர்பாரில் உயர் பதவியை அளிக்கிறேன். உனக்கு மாதம் ஐயாயிரம் வராகன்கள் சம்பளம். ஆனால் நீ இனிமேல் பாடவே கூடாது!'' என்றான்.

இப்படியாக யோகானந்தர் மகிஷகண்டனின் கைரேகையைப் பார்த்துக் கூறிய சோதிடம் பலித்தது!



நம் காவேரிக்கரைப் பயணத்தில் அடுத்து கும்பகோணத்தை நோக்கிச் செல்கிறோம். வழியில் கஞ்சனூர், திருவிசைநல்லூர் ஆகிய ஊர்களைக் காண்கிறோம். கஞ்சனூர் கைத்தறிப் புடவைகளுக்குப் பெயர் பெற்றது. திருவிசைநல்லூர் விகடம் ராமசுவாமி அய்யராலும், சமூகச் சேவைக்குப் பெயர் பெற்ற ஸ்ரீதர அய்யாவாளாலும், புகழ் பெற்ற ஊர். மைசூர் சமஸ்தான மந்திரியாக இருந்த ஸ்ரீதர அய்யாவாள் சமூக சேவை செய்யவே தம் பதவியைத் துறந்து திருவிசைநல்லூருக்கு வந்தார். யாவரிடமும் மனிதாபிமானமும் கருணையும் காட்டி இவர் உதவி வந்ததால் இவரை 'அய்யாவாள்' என்று யாவரும்

## காவேரிக் கரைஓரமாய்...10

# தென் பாரதக் காசி

**கருத்து : ஜெயந்தி மகாலிங்கம்  ஓவியம் : கௌதம் சென்**

மரியாதையுடன் குறிப்பிட்டு வந்தார்கள்.

ஒரு முறை அய்யாவாள் தம் தாயாருக்கு திவசம் செய்ய சில பிராமணர்களுடன் காவேரி நதியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார். வழியில் தாழ்த்தப்பட்ட ஜாதியைச் சேர்ந்த ஒருவன் பசியால் விழுந்து துடிதுடித்துக் கொண்டிருப்பதைக் கண்டார். உடனே வீட்டிற்குப் போய் திவசத்திற்காக தயாரிக்கப்பட்ட உணவை எடுத்து வந்து அவனுக்குக் கொடுத்தார். இதைக்கண்டு அவரோடு வந்த பிராம்மணர்கள் திவசகாரியங்களில் கலந்து கொள்ள முடியாது என்று கூறி விட்டுப் போய் விட்டார்கள். அய்யாவாள் அது பற்றிக்கவலைப்படாமல் அந்த நான்கு பிராமணர்களுக்கு பதிலாக நான்கு தர்ப்பைபுல்களை வைத்து தானே திவசத்தைச் செய்து முடித்தார்.

கும்பகோணத்தை காவேரிக்கரை காசி எனவும் கூறுகிறார்கள். காவேரி நதியின் தென்



ஆதிகும்பேஸ்வரர் ஆலயம்



ஐராவதேஸ்வரர் ஆலயம்

கரையில் அமைந்துள்ள இந்தநகர் ஒன்பதாவது நூற்றாண்டிலிருந்தே மத, சமுதாய, பொருளாதார நிகழ்ச்சி களுக்கு மையமாக விளங்கி வருகிறது. பட்டு, மற்றும் பலவித கைவினைப் பொருள்கள், வெங்கல, பித்தளைப் பாத்திரங்கள், தங்க நகைகள் செய்வது ஆகியவற்றிற்கு இவ்வூர் பெயர் பெற்றது. இங்குள்ள ஓவியக் கல்லூரி பல ஓவியர்களை அளித்துள்ளது. சிற்பிகளைக் கொடுத்துள்ளது.

சௌராஷ்டிரா பகுதியிலிருந்து இங்கு வந்து குடியேறியவர்கள் சரிகை வேலைப்பாடுடன் கூடிய துணிகளைத் தயாரித்தனர். இங்குள்ள அரசினர் கல்லூரியில் படித்தவர்கள் மாபெரும் மேதைகளாகத் திகழ்ந்திருக்கிறார்கள்.

கும்பகோணத்தில் அறுபதிற்கும் மேலாக ஆலயங்கள் உள்ளன. இவற்றில் கும்பேஸ்வரர் ஆலயம் ஒன்று. இதன் காரணமாகத்தான் இவ்வூருக்குக் கும்பகோணம் என்ற பெயர் வந்தது. பிரளயம் வருவதற்கு முன் பிரம்மா எல்லா தெய்வீக விதைகளையும் ஒரு அமிர்த குடத்தில் போட்டு பரமேஸ்வரரிடம் கொடுத்து மேரு மலையில் பத்திரமாக வைக்கச் சொன்னாராம். பிரளயத்தின் போது இந்த கும்பம் (குடம்) நீரில் அடித்து இப்பகுதிக்குக் கொண்டு வரப்பட்டதாம். குடத்திலிருந்த அமிர்தம் விழும்படி சிவனார் அம்பால் அடித்தாராம். அந்த அமிர்தத்தில் கொஞ்சம் மகாமகக்குளத்திலும் எஞ்சியது பொற்றாமரைக்குளத்திலும் விழுந்ததாம்.

சிவனார் மணலை அமிர்தத்துடன் கலந்து லிங்க வடிவாக்கி அதில் ஐக்கியமானாராம்.

கும்பகோணத்தின் ஆதி கும்பேஸ்வர் ஆலயம் 9000ச.அடி பரப்பளவானது. இதற்கு மூன்று தலைவாசல்கள் கோபுரங்கள் உள்ளன. கி.பி 7வது நூற்றாண்டிலிருந்து இந்த ஆலய வரலாற்று விவரங்கள் கிடைத்துள்ளன. அப்பர், சம்பந்தர் ஆகிய நாயன்மார்கள் தேவாரப்பாடல் பாடிய புகழ் பெற்ற ஆலயம் இது. 16,17 நூற்றாண்டுகளில்

விஜயநகர நாயக்க மன்னர்கள் இந்த ஆலயத்தைச் சுற்றிப் பல ஆலயங்களைக் கட்டினார்கள். அச்சுத நாயக்க மன்னரின் அமைச்சராக இருந்த கோவிந்த தீட்சிதர் மகாமகக் குளத்தையும் மற்ற குளங்களையும் சுற்றி மண்டபங்களைக் கட்டினார். அவர் மகாபண்டிதர். தத்துவஞானி கர்மயோகி. எனவே அவரை யாவரும் மரியாதையுடன் 'அய்யன்' என்று குறிப்பிட்டு வந்தனர். கும்பகோணத்தில் ஐயன்குளம், அய்யன் தெரு, அய்யன் கடை எண்றெல்லாம் அவர் பெயரில் இருப்பதைக் காணலாம்.



மகாமகக் குளம்

இந்நகரிலுள்ள நாகேஸ்வரர் ஆலயம் சோழர்கள் காலத்தது. சோழர் கால சிற்பகலையின் சிறப்பை இங்கு காணலாம். சோழர்காலத்தில் இங்கு கட்டபட்ட மற்றோர் ஆலயம் சாரங்கபாணிக் கோவில். இங்கு மூல விக்கிரகம் சயனித்த நிலையில் உள்ளது. நாயக்க மன்னர்கள் இந்த ஆலயத்தின் ஒன்பது அடுக்கு கோபுரத்தை நிர்மாணித்தார்கள்.

ஐராவதேஸ்வரர் ஆலயச் சிற்பக் கலை



கும்பகோணத்திலிருந்து 5கிமீ தொலைவிலுள்ள தாராசுரக் கோவில் தேர்வடிவில் அமைந்துள்ளது. இந்த ஐராவதேஸ்வரர் ஆலயம் சோழர்காலச் சிற்பக்கலைக்கு எடுத்துக் காட்டு. ஆலயத்தின் முன்னுள்ள சில கம்பங்களைத் தட்டினால் இனிய இசை ஒலி எழுகிறது.

வட இந்தியாவில் கும்பமேளா நடப்பது போல இங்கும் பனிரெண்டு வருடங்களுக்கு ஒரு முறை மாசி மாதத்தில் மகாமகவிழா நடைபெறுகிறது. அந்த நாளில் பாரத நாட்டிலுள்ள புனித நதிகளிலிருந்து நீர் அந்தர்வாகினியாக வந்து


மகாமகோபாத்தியாய
உ.வே.சுவாமிநாதய்யர்

காவேரி நதியில் கலப்பதாக எண்ணி அதில் குளிக்கிறார்கள். இதே சமயம் மகாமகக்குளத்தில் குளித்தால் புண்ணியம் என எண்ணி இந்தியாவின் எல்லாப்பகுதிகளிலிருந்தும் லட்சக்கணக்கான மக்கள் வந்து இக்குளத்தில் குளிக்கிறார்கள். அண்மையில் கடைசியாக 1992 பிப்வரியில் மகாமக விழா நடைபெற்றது.

கும்பகோணத்திற்கு அருகே காவேரிக்கரையில் அமைந்துள்ள பாபநாசம், சுவாமிமலை, உமையாள்புரம், கபித்தலம் ஆகிய இடங்களில் பல பிரபல இசைவாணர்கள் பிறந்து புகழ் பெற்றிருக்கிறார்கள். சங்ககாலத்து தமிழ் இலக்கியங்களை ஏட்டுச் சுவடிகளாகத் தேடிக் கண்டுபிடித்து அளித்த மகாமகோபாத்தியாய உ.வே.சுவாமிநாதய்யர் (1885-1942) பிறந்ததும் இப்பகுதியில் தான். தமிழ் தாத்தா எனப்பட்ட இவரும், இவரது ஆசிரியர் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையும், நந்தன் சரிதத்தை இசைப்பாடல்களாக அளித்த கோபால கிருஷ்ண பாரதியும் தமிழில் முதல் நாவலை எழுதிய வேதநாயகம் பிள்ளையும் காவேரி பாயும் தஞ்சை மாவட்ட மண்ணில் பிறந்தவர்களே. உ.வே.சுவாமி நாதய்யர் பல ஆண்டுகள் கும்பகோணம் அரசினர் கல்லூரியில் தமிழ் பேராசிரியராகப் பணி புரிந்தார்.

கும்பகோணத்திற்குப் பெருமை சேர்த்த மற்றொருவர் கணித மேதை சீனிவாச ராமானுஜம். இவ்வூரில் கல்வி கற்ற இவர் பின்னர் உலகப்புகழ் பெற்ற மாபெரும் கணித மேதை ஆனார்.


சீனிவாச ராமானுஜம்

திருபுவனத்துச் சோழர் காலத்துக் கோவில், திருவிடைமருதூரின் மகாலிங்கேஸ்வரர் ஆலயம் முதலியன பெயர் பெற்ற சிறப்பான ஆலயங்களாம். திருவிடைமருதூர் ஆயலத்தில் 1200 ஆண்டுகளுக்கு முன் செதுக்கப்பட்ட கல்வெட்டுகள் உள்ளன. அப்பர் சம்பந்தர், மாணிக்க வாசகர் புகழ்ந்து பாடிய பாடல் பெற்ற தலம் இது.

இதற்குப்பின் நாம் சென்று அடைவது மயிலாடுதுறை என்ற ஊர். இது மாயவரம் என்ற பெயரிலும் குறிப்பிடப்பட்ட ஊர். இங்கு அக்டோபர், நவம்பர் மாதங்களில் 'கடைமுகஸ்நானம்' என்ற சிறப்புவிழா நடைபெறுகிறது. இந்நகர் பற்றி பட்டினப் பாலை என்ற பழங்கால நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.



# காப்பது என் கடமை!

வேப்பம்பட்டியில் வேம்பன் என்ற அநாதை இருந்தான். அவன் அந்த ஊரில் எல்லோருக்கும் உதவிபுரிந்து அவர்கள் கொடுப்பதை வாங்கிக் கொண்டு வாழ்ந்து வந்தான். இரவு வேளைகளில் காவல் காத்து பக்கத்து காட்டிலிருந்து வரும் நரி, ஓநாய்களை விரட்டி அந்த ஊர் ஆடு மாடுகளையும் காப்பாற்றி வந்தான்.

ஒருநாள் அவ்வூரில் புரோகிதரும் பண்டிதருமான பசுபதி சாஸ்திரி வேம்பனை அழைத்து ''வேம்பா! நம் ஊர் அம்மன் கோவிலுக்கு தம் பிரார்த்தனையைச் செலுத்த இந் நாட்டு மன்னர் நாளை மாலை தன் குடும்பத்தோடு வரப் போகிறார். நம் ஊரை அடுத்த காட்டிற்கு இரு புதுப் பிசாசுகள் வந்திருக்கின்றனவாம். அவை அக் காட்டின் வழியே போவோர் வருவோரைத் துன்புறுத்துகின்றனவாம். நம் மன்னர் அக் காட்டின் வழியே வருவதால் அவரையும் அவை துன்புறுத்தலாம். நீ மட்டும் மன்னரை அவற்றிடமிருந்து காப்பாற்றி விட்டால் நான் ராஜ தர்பாரில் உத்தியோகம் வாங்கித் தருகிறேன்'' என்றார்.

வேம்பனோ ''பண்டிதரே! எனக்கு ராஜ தர்பார் வேலை எதுவும் வேண்டாம். நான் இவ்வூரிலேயே இருந்து எல்லோருக்கும் வேலை செய்வேன். மன்னர் நம் ஊருக்கு வருவதால் அவருக்கு எவ்வித ஆபத்தும் நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நம் பொறுப்பு. நீங்கள் கவலைப் படாதீர்கள். பிசாசுகள் சங்கதியை நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று கூறி அன்று மாலையே காட்டிற்குச் சென்றான்.

வேம்பன் நன்கு இருட்டிய போது காட்டின் அடர் பகுதியை அடைந்தான். அப்போது ஒரு பாழுங் கிணறின் சுவர் மீது இரு பிசாசுகள் அமர்ந்திருப்பதைக் கண்டு அவன்

மோகன் சங்கரராம்



அக்கிணற்றின் அருகே ஒரு மரத்தின் பின்னால் மறைந்து நின்று கொண்டு அவை என்ன பேசுகின்றன என்று கேட்கலானான். அவற்றில் ஒன்று நெட்டையானது. ஒல்லியானது. மற்றது குட்டையானது. குண்டானது.

ஒல்லிப் பிசாசு குண்டுப்பிசாசிடம் ''இந்நாட்டு மன்னன் நம்மை ஓரிடத்தில் நிலைத்திருக்க விடாமல் விரட்டிக் கொண்டே இருக்கிறான். அவனைப் பழி வாங்க வேண்டும். நாளை இவ்வழியே பக்கத்திலுள்ள ஊருக்குப் போகப் போகிறானாம். அவன் அவ்வூர் எல்லையைக் கடக்கும் பாதையில் ஒரு திருப்பம் இருக்கிறது. நான் அங்கு உயரமான இடத்திலிருந்து ஒரு பாறாங்கல்லை உருட்டி அவனது ரதத்தைத் தாக்கி அவனைக் கொன்று விடப் போகிறேன்'' என்று ஆத்திரத்துடன் கூறியது.

குண்டுப் பிசாசு அப்போது ''நீ இப்படிச் செய்தும் அவன் உயிர் தப்பிவிட்டால் நாளை அவனை கௌரவிக்க அமைத்துள்ள மேடையில் அவன் அமர்ந்ததும் அதில் நெருப்பு மூட்டி அவன் எரிந்து சாம்பலாகிப் போகும்படி நான் செய்கிறேன்'' என்றது. அப்போது ஒல்லிப்பிசாசு ''இந்த இரு முயற்சிகளிலும் மன்னன் தப்பிவிட்டால் அவனது வெற்றிலைப் பெட்டியில் பாக்கு டப்பிக்குள் நான் கடும் விஷம் கொண்ட கருந்தேளாக இருப்பேன். அவன் பாக்கு போட டப்பியை திறந்ததும் என் கொடுக்கால் கொட்டுவேன். விஷம் உடலில் ஏறி அவன் இறந்து விடுவான்'' என்றது.

குட்டிப் பிசாசும் ''ராணியின் பூக்குடலையில்விஷப்பாம்பாக சுருண்டு மறைந்திருப்பேன். அவள் பூவை எடுக்கக்கையைக் குடலைக்குள் விட்டதும் நான் அவளைத் தீண்டி விடுவேன். அடுத்த விநாடியே அவள் இறந்து விழுவாள்'' என்றது. பிறகு இரு பிசாசுகளும் தம் திட்டப்படி மறுநாள் செயல்படுவது என்று கூறிக் கொண்டு சென்றன.

மறுநாள் வேம்பன் ஊருக்கு வெளியே திருப்பத்திற்கு சற்று முன் நின்றான். மன்னரின் ரதம் வந்ததும் அதை நிறுத்தி தேரோட்டியிடம் ''அதோ அந்த திருப்பத்தைக் கடக்க மிக வேகமாக ஓட்டிக் கொண்டு போய் விடு'' என்றான்.

தேரோட்டியும் அவ்வாறே செய்ய, ரதம் திருப்பத்தைக் கடந்த பின் ஒல்லிப்பிசாசு உருட்டிவிட்ட பாறாங்கல் உருண்டு வந்து எங்கோ விழுந்தது. மன்னன் உயிர் தப்பியது கண்டு அமைச்சர் அவரிடம் ''இன்று நீங்கள் உயிர் தப்பியது வேம்பனால்தான். அவனுக்கு நீங்கள் நிறையப் பரிசளிக்க வேண்டும்'' என்றார். மன்னனும் தலையை ஆட்டினான்.

மன்னனின் ரதம் ஊருக்குள் சென்றது. மன்னனும் ராணியும் வரவேற்பு மேடையில் ஏறுவதற்கு முன் வேம்பன் மன்னனிடம் ''நீங்கள் மேடை மீது ஏறி வெகு வேகமாகப் போய் மறுபுறம் சட்டென இறங்கி விடுங்கள்'' என்றான். மன்னனும் ராணியும் அவ்வாறே செய்தனர். அவர்கள் கீழே இறங்கியதும் குண்டுப் பிசாசு மேடைக்கு வைத்த தீ பரவி சாம்பலாகியது. மன்னன் அம் முறையும் வேம்பனால் உயிர் தப்பியதை அமைச்சர் அவனிடம் கூறினார்.

இதை எல்லாம் கண்ட சேனாதிபதி இந்த வேம்பன் அரசனிடம் நிறையப் பணம் பரிசாகப் பெற இவற்றை திட்டமிட்டுச் செய்தானோ என்று சந்தேகித்தான். அதை மன்னனி டமும் கூறினான். மன்னனும் ''எனக்குக் கூட சந்தேகம் ஏற் படுகிறது. இப்படி எல்லாம் நடக்கப் போகிறது என்று முன் கூட்டியே இந்த வேம்பனுக்கு எப்படித் தெரிந்தது? இதில் ஏதோ



ரகசியம் இருக்கிறது'' என்று சொன்னான்.

சேனாதிபதியின் கட்டளைப்படி சில வீரர்கள் வேம்பனைப் பிடித்துக் கொண்டு போனார்கள். அப்போது கிராம அதிகாரி தலையிட்டு ''வேம்பன் எல்லோருக்கும் உதவுபவன். யாருக்கும் கெடுதலை எண்ணாதவன். அவனுக்கு மந்திர தந்திரங்கள் எதுவும் தெரியாது. இவனை சிறு வயதிலிருந்து நாங்கள் எல்லோரும் அறிவோம்'' என்றார்.

அது கேட்டு சேனாதிபதி ''இதோ பார். மந்திரதந்திரங்கள் கற்பவன் அவற்றை ரகசியமாகத் தான் கற்றுக் கொள்வான். எல்லோருக்கும் தெரியும் விதத்தில் கற்கமாட்டான். காடுகளிலும்



மலைக்குகைகளிலும் மந்திரவாதிகள் வசிப்பார்கள். இந்த வேம்பன் இரவு வேளைகளில் காட்டிற்குள் போய் யாராவது மந்திரவாதியிடம் மந்திரதந்திரங்களைக் கற்றிருப்பான். அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள இது தான் தக்க சமயம் என்று எண்ணி மந்திர சக்தியால் பாறாங்கல்லை வரவழைத்து மேடைக்குத் தீ மூட்டியும் இருப்பான். இவன் மன்னனின் தயவைப் பெற இவ்வாறு செய்கிறான் என்றே நினைக்கிறேன்.'' என்றான்.

சேனாதிபதி கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்த வேம்பன் சற்றும் பதட்டப்படாமல் மன்னனிடம் ''அரசே! இன்றிரவு நீங்களும் ராணியாரும் இரண்டு போக்கிரிப் பிசாசுகளால் ஆபத்தில் அகப்பட்டுக் கொள்ளப்போகிறீர்கள். நான் உங்களைக் காப்பாற்ற முடியும்'' என்றான். சேனாதிபதி குறுக்கிட்டு ஏதோ சொல்லப் போகையில் அமைச்சர் இடைமறித்து'' அரசே! இந்த வேம்பன் உங்கள் அறையில் இருக்கட்டும். அப்போது இரவில் எந்த விதமான ஆபத்து வரும் என்பது தெரிந்து விடும்'' என்றார். மன்னனும் அதற்குச் சம்மதித்தான்.

வேம்பன் மன்னனுடன் அவனது அறைக்குச் சென்றான். அங்கு மன்னன் தன் வெற்றிலைப் பெட்டியைத் திறந்து அதிலிருந்து பாக்கு டப்பியை எடுத்தான் வேம்பன் அதைத்தானே திறந்து கொடுப்பதாக வாங்கிக் கொண்டு அதைத் திறந்தான். டப்பிக்குள் விஷக் கருந்தேளாக இருந்த ஒல்லிப்பிசாசு தலைதூக்கவே அவன் சட்டென டப்பியை மூடிவிட்டான். இது போல ராணியார் பூக்குடலையிலிருந்து பூ எடுக்கப் போகவே வேம்பன் குடலையைத்தான் வாங்கிக் கொண்டு அதன் வாயைத் திறந்தான். உள்ளே கருநாகம் இழுப்பதைக் கண்ட அவன் குடலையின் வாயையும் சட்டென மூடி விட்டான். பிறகு அவன் ''அரசே! உங்கள் பாக்கு டப்பில் இருந்தது கருந்தேள். நீங்கள் டப்பிக்குள் விரல் விட்டதும் உங்களைக் கொட்ட அது தயாராக இருந்தது. ராணியின் பூக்குடலையில் இருந்தது கருநாகம். ராணியார் குடலைக்குள் கை விட்டதும் அவரைத் தீண்ட அது தயாராக இருந்தது. இவை இரண்டும் இரு

பிசாசுகள். உங்களைப்பழி வாங்க இப்படி மறைந்திருந்தன. இவற்றை நான் கொண்டு வந்து மறைத்து வைக்கவில்லை என்பது தங்களுக்குத் தெரியும்'' என்றான்.

இதைக் கேட்டு எல்லோரும் பயந்து போனார்கள். அப்போது வேம்பன் ''ஆழக்குழி தோண்டி இந்த பாக்கு டப்பியையும் பூக்குடலையையும் அதற்குள் போட்டு மண்ணால் அக்குழியை மூடி விடுங்கள். இந்த இரண்டு பிசாசுகளும் இனிதலை தூக்காது'' என்றான். மன்னன் தன் வீரர்களிடம் வேம்பன் சொன்னபடி செய்யச் சொல்லி விட்டு ''வேம்பா! இவ்வளவு துணிச்சல் கொண்ட உன்னை இந்நாட்டின் சேனாதிபதியாக ஆக்க நினைக்கிறேன்'' என்றான். ராணியும் ''அப்படியே செய்யுங்கள்'' என்று மகிழ்ச்சியுடன் கூறினாள்.

வேம்பனோ ''நான் எந்தப் பதவியையோ அல்லது பரிசையோ எதிர்பார்த்து இதை எல்லாம் செய்யவில்லை. நீங்கள் எங்கள் ஊருக்கு வந்திருக்கிறீர்கள். உங்களுக்கு எவ்வித ஆபத்தும் வராமல் பாதுகாக்க வேண்டியது எங்கள் கடமை'' என்றான். அப்போது அமைச்சரும் சேனாதிபதியும் ''இந்த மாவீரன் எந்தப் பதவியும் வேண்டாம் என்கிறான். நம் இளவரசிக்கு ஏற்ற மணாளன் இந்த சுத்த வீரன். இவனுக்கு அவளைத் திருமணம் செய்து வைத்து விடுங்கள்'' என்றார்கள்.

மன்னனும் ''நீங்கள் கூறும் யோசனை சரியானது தான்'' எனவே, வேம்பனும் ''அரசே! என்னை மன்னியுங்கள். எந்த நிலையிலும் நான் இந்த ஊரை விட்டுப் போக மாட்டேன். இது என் தந்தைக்கு அவர் இறக்கும் போது நான் கொடுத்த வாக்குறுதி'' என்று கூறி விட்டுச் சென்றான்.

அரசனும், அமைச்சரும், சேனாதிபதியும் ''ஆகா! தந்தை சொல் காத்த இவன் வேண்டாமென்றாலும் ஏராளமான பரிசுகளை இவனுக்கு அளிப்போம்'' என்றார்கள்.



# உல்லாசம் உற்சாகம் உண்டாகுமே...!



நான் எங்கப்பா, அம்மா அண்ணனோட அதிசயம் தீம்பார்க் போனேன். அடேயப்பா! எவ்வளவு பெரிய பார்க்தெரியுமா குட்டிகடல், சறுக்கி விளையாட ஸ்லைடு, ஜாலியா போட்டிங், குட்டிகுட்டியா நிறைய ட்ரைன், டோரா டோரா த்ரில்லான வாட்டர் சூட் இப்படி நிறைய்ய்ய விளையாட்டு. ஒரு நாள் முழுக்க ஜாலியோ ஜாலி மறுபடியும் நான் அதிசயம் தீம்பார்க் போகப் போறேன். என்ன நீங்க போகலையா, அப்ப சீக்கிரம் உங்க குடும்பத்தோட கிளம்புங்க. ஓ கே வா...











வெளியிலிருந்து கொண்டு வரும் உணவு பொருட்களுக்கு அனுமதி இல்லை.

**அனுமதி கட்டணம்**
பெரியவர்கள்-Rs.200/-
குழந்தைகள்-Rs.150/-

**பூங்கா அனுமதி நேரம்**
காலை 10.00 மணி முதல்
மாலை 6.30 மணி வரை







**MORE WATER... MORE FUN...**

**மதுரை-திண்டுக்கல் ரோடு, பரவை, மதுரை.**

SASI/MDU/2K

54. சுவேதனின் மரணம்

# மகாபாரதம்

பீமன் தான் முதலில் போரில் தாக்குதலை ஆரம்பித்தவன். சிம்ம கர்ஜனை செய்தவாறே அவன் கௌரவப் படைகளைத் தாக்கினான். துரியோதனன், துச்சாதனன், துன் முகன், துச்சகன் ஆகியோர் பீமனைத் தாக்க வந்தனர். அவர்களை உபபாண்ட வர்களும், அபிமன்யு, நகுலன், சகாதேவன், திருஷ்டத்யும்னன் ஆகியோர் கௌரவர்களைச் சூழ்ந்து கொண்டும், அவர்களது தாக்குதலை முறியடித்தார்கள். இப்படியாகப் போர் பரவலாயிற்று.

இதன்பின் பீஷ்மரும் அர்ஜுனனும் ஒருவரையொருவர் தாக்கலானார்கள். அப்போது சாத்தியகி கிருதவர் மனையும், அபிமன்யு பிரகத்பலனை யும், பீமன் துரியோதனனையும், துச்சாதனன் நகுலனையும், துன்முகன் சகாதேவனையும் தாக்கிப் போர் புரிந்தனர். இதுபோல் தருமர் சல்லிய னுடனும், திருஷ்டத்யுனன் துரோணரு டனும், திருஷ்டகேது பாஹ்லிகனுட னும், கடோத்கசன் அலம்பசனுடனும், சிகண்டி அசுவத்தாமனுடனும், விராடன் பகதத்தனுடனும், துருபதன் சைந்தவனுடனும் போர் புரிந்தனர். யாரும் சற்றும் சளைக்க வில்லை.

போரில் பீஷ்மர் பாண்டவர் படை களைக் கடுமையாகத் தாக்கினார். அவரது மெய்க் காவலர்கள் போல





துன்முகன் கிருதவர்மன், கிருபர், சல்லியன், விவிம்சதி ஆகியோர் சுற்றிலும் இருந்தார்கள். பீஷ்மர் பாண்டவப் படைகளை அழிப்பதைக் கண்டு அபிமன்யு வெகுண்டு எழுந்தான். அவன் பீஷ்மரைத் தாக்கி அவரது தேரில் பறந்த கொடியை அறுத்து வீழ்த்தினான். அவருக்குக் காவலாக நின்றவர்களைக் கடுமையாகத் தாக்கினான். அபிமன்யுவிற்குத் துணையாக பீமனும், விராடனும், அவனது புதல்வர்களும், சாத்தியகியும் திருஷ்டத்யும்னனும் வந்து சேர்ந்தார்கள்.

உத்தரன் ஒரு யானை மீதேறி சல்லியனைத் தாக்கினான். இருவருக்கும் நடந்த போரில் உத்தரன் அடிபட்டுக் கீழே விழுந்தான். அது கண்டு அவனது தமையனான சுவேதன் ஒரே தடவையில் ஏழு கௌரவ வீரர்களை எதிர்த்துக் கொன்றான். அப்போரில் சல்லியன் மயிரிழையில் உயிர் தப்பினான். ஆனால் சுவேதனை பீஷ்மரின் தாக்குதலிலிருந்து காப்பாற்ற பாண்டவ வீரர்கள் திணறினார்கள். இதற்காகப் பயங்கரப் போர் நிகழ்ந்தது. கௌரவ வீரர்களை அடித்துத் துரத்தி விட்டு சுவேதன் பீஷ்மரின் முன் சென்றான். இதன் காரணமாக பாண்டவசேனையை பீஷ்மர் அழித்துக் கொண்டிருந்த வேகம் வெகுவாகக் குறைந்து விட்டது. அது மட்டுமல்ல, சுவேதனின் கடுமையான தாக்குதலால் பீஷ்மரும் சற்றுப் பின்வாங்கலானார். இதுகண்டு பாண்டவ வீரர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

பீஷ்மர் பின் வாங்கியது கண்டு சுவேதன் திருதராஷ்டிரனின் புதல்வர்கள் நின்ற இடத்திற்குச் சென்றான். அவர்களை அவன் பயங்கரமாகத் தாக்கவே அது கண்டு பீஷ்மர் அவர்களது உதவிக்குச் சென்றார். பீஷ்மருக்கு அருகே எட்டு கௌரவ வீரர்கள் நின்று கொண்டு சுவேதனின் மீது அம்பு மழை பொழிந்தனர். சுவேதன் சற்றும் கலங்கவில்லை. அந்த வீரர்களை எதிர்த்து அடித்து பீஷ்மரையே நிலைகுலையச் செய்து விட்டான். பீஷ்மர் தோற்றுப் போகும் நிலை ஏற்பட்டு விட்டது என்று பலர் எண்ணவும் எண்ணினார்கள். ஆனால் பீஷ்மர் சமாளித்துக் கொண்டு திருப்பித் தாக்கி சுவேதனின் ரதத்தை சேதப்படுத்தினார். இதனால் கோபம் கொண்டு கதையைத் தூக்கியவாறே பீஷ்மரை அடித்து

வீழ்த்த சுவேதன் அவர் பக்கம் சென்றான். பீஷ்மர் சட்டெனத் தன் தேரிலிருந்து இறங்கவே சுவேதனால் அவரை அடிக்க முடியவில்லை. பீஷ்மரும் பிறகு ரதத்தில் ஏறிப் போர்புரியலானார்.

சுவேதன் ரதத்தை இழந்து நிற்பதைக் கண்டு அவனது உதவிக்கு சாத்தியகி, பீமன், அபிமன்யு, முதலானோர் விரைந்து வந்தனர். ஆனால் பீஷ்மர் அவர்கள் யாவரையும் தடுத்து நிறுத்தினார். அவரது கூரிய அம்பு சுவேதனைத் தாக்கி அவனது உயிரைப் போக்கி விட்டது. மாபெரும் வீரன் சுவேதனின் மரணம் பாண்டவர்களுக்கு ஈடுசெய்யமுடியாத இழப்பையும்துயரத்தையும் அளித்தது. கௌரவர்களோ மகிழ்ச்சிக்கடலில் மூழ்கினார்கள்.

சுவேதன் இறந்தது கண்டு அவனது தம்பி சங்கன் வெகுண்டு எழுந்து கிருதவர்மனின் பின்னால் நின்ற சல்லியனைக் கடுமையாகத் தாக்கினான். சல்லியனைச்சுற்றிஏழு கௌரவ வீரர்கள் அவனைப் பாதுகாக்க நின்று கொண்டிருந்தனர். சங்கனின் பயங்கரத் தாக்குதலைக் கண்டு பீஷ்மர் அவனைத் துரத்துவதற்குத் தாக்கத் தொடங்கினார். அப்போது அர்ஜுனன் விரைந்து வந்து பீஷ்மரை எதிர்க்கலானான். சல்லியன் சங்கனின் ரதத்தைச் சேதப் படுத்தவே, அவன் ஓடிப் போய் அர்ஜுனனின் ரதத்தில் ஏறிக் கொண்டான்.

பீஷ்மர் அர்ஜுனனைத் தடுத்து விட்டு துருபதனைத் தாக்கி அவனது படையைச் சிதறி ஓடச் செய்தார். இது கண்டு பாண்டவப் படைகள் பயந்து நடுநடுங்கின. இச் சமயத்தில் மாலையாகி சூரியன் மறையவே இரு தரப்பினரும் போரை நிறுத்தி விட்டுத் தம் கூடாரங்களுக்குச் சென்றனர்.



பீஷ்மர் கடும் போர் புரிந்து பாண்டவர் படைக்குப் பெருத்த சேதம் விளைவித்தது குறித்து துரியோதனன் மகிழ்ந்து போனான்.

தருமரோ முதல் நாள் போரில் தன் தரப்பிற்கு ஏற்பட்ட நஷ்டத்தைக் கண்டு மனம் கலங்கி, கிருஷ்ணரிடம் போய் "பார்த்தீர்களா இன்று பீஷ்மர் எவ்வளவு பயங்கரமாகப் போர் புரிந்தார் என்று! நம் படைகளை அவர் தவிடுபொடி ஆக்கி விட்டாரே! இந்த பீஷ்மரை வெல்வது என்பது மிகவும் சிரமமாக இருக்கும்போலிருக்கிறதே. அவருடன் யாராலும் போர் புரிந்து வெற்றியடைய முடியாது. இப்படி அவஸ்தைப் படுவதைவிட முன்பு நாம் செய்த வனவாசமே மேல். போர் புரியாமல் பேசாமல் காட்டிற்கே நாமெல்லோரும் போய்விடலாம். வீணாக நமக்குத் துணை புரியவந்த அரசர்களை ஏன் பலி கொடுக்க வேண்டும்? நாடாளும் ஆசைதான் என்னை இந்த நிலைக்குக் கொண்டு வந்துவிட்டிருக்கிறது. பேசாமல் நிம்மதியாக ஓரிடத்தில் அமர்ந்து தவம் செய்வதே மேல். போரில் அர்ஜுனன் தன் திறனைக் காட்டவில்லை. பீமன் ஒருவன்தான் பயங்கரமாகப் போர் புரிந்தான். எப்படியும் நாம் பீஷ்மரால் கொல்லப் படத்தான் போகிறோம்" என்று கூறினார்.

கிருஷ்ணர் தருமருக்கு ஆறுதல் கூறி "நீ இப்படி மனம் கலங்குவது சரியல்ல. உன் தம்பிகள் அனைவரும் மாபெரும் வீரர்களே. சாத்தியகி, விராடன், துருபதன், திருஷ்டத்யும்னன் போன்ற



மாவீரர்கள் உனக்கு உறுதுணையாக இருக்கிறார்கள். நீ ஏன் வீணாகக் கவலைப் படுகிறாய்? சிகண்டி பீஷ்மரைக் கொல்லவே பிறந்தவன் என்பதை நினைவில் கொள்" என்றார்.

அப்போது திருஷ்டத்யும்னன் "நான் துரோணரைக் கொல்வதற்காகவே பிறந்தவன். பீஷ்மரையும் துரோணரையும் கிருபரையும் சல்லியனையும் எதிர்த்துப் போராட என்னால் முடியும். நான் எல்லா படைகளுக்கும் தலைமை தாங்குவது வெறும் அலங்காரத்திற்கு அல்ல" என்றான். தருமரும் உற்சாகமுடன் "சரி, நாளை கிரௌஞ்ச வியூகம் அமைக்கலாம். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் நடந்த போது தேவேந்திரனுக்கு பிரம்மா கிரௌஞ்ச வியூகம் அமைக்கக் கற்றுக்



கொடுத்தாராம்'' எனறார்.

இரண்டாவது நாள் போரில் பாண்டவர் படை கிரெளஞ்ச வியூகத்தில் நிறுத்தப்பட்டது. அதன் முன் அர்ஜுனன் நின்றான். இந்த வியூகத்தின் தலைப் பகுதியில் துருபதன் இருந்தான். தருமர் வால் பகுதியில் நின்றார். பீமனும் துருபதனும் இரு இறக்கைப் பகுதிகளில் நின்றனர். சூரியோதயம் ஆகும் போது கிரெளஞ்ச வியூகம் அமைக்கப் பட்டு விட்டது! இந்த வியூகத்தைப் பார்த்த பீஷ்மரும் துரோணரும் இதற்கு மாற்று வியூகம் அமைத்து கௌரவ வீரர்களை ஆங்காங்கு நிறுத்தினார்.

போர் ஆரம்பமானதும் பீஷ்மர் அபிமன்யு, பீமன், அர்ஜுனன், விராடன், திருஷ்டத்யும்னன் ஆகிய பாண்டவ வீரர்களைக் கடுமையாகத் தாக்கினார். பாண்டவ வியூகம் கலையலாயிற்று. இது கண்டு பீஷ்மரைக் கொல்ல அர்ஜுனன் தன் ரதத்தை அவர் பக்கம் செலுத்தும்படி கிருஷ்ணரிடம் கூறினான். ரதம் பீஷ்மர் இருந்த இடத்தை நோக்கிச் செல்லவே கௌரவ வீரர்கள் அர்ஜுனனைத் தடுத்து நிறுத்த முயன்றனர். ஆனால் அர்ஜுனன் அவர்களை அடித்து வீழ்த்திவிட்டு முன்னேறினான்.

அதைக் கண்ட பீஷ்மர் அர்ஜுனனை எதிர்க்கலானார். அவருடன் சைந்தவன் போன்ற வீரர்கள் வந்தனர். பீஷ்மருடன் துரோணரும் கிருபரும், துரியோதனனும், சல்லியனும் அசுவத்தாமனும் சேர்ந்து அர்ஜுனனைத் தாக்கினார்கள். அர்ஜுனன் எல்லோருடைய தாக்குதல்களையும் சமாளித்து பதிலடிப் கொடுத்தான். அவனுக்குத் துணையாக சாத்தியகி, விராடன், திருஷ்டத்யும்னன் உபபாண்டவர்கள், அபிமன்யு ஆகியோரும் வந்தனர். துருபதன் பீஷ்மரைக் கடுமையாகத் தாக்கினான்.

அப்போது துரியோதனன் பீஷ்மரிடம் சென்று ''பிதாமகரே! அர்ஜுனன் நம் சேனையை நாசப்படுத்தி வருகிறான். அவனை எதிர்க்கும் சக்தி படைத்த கர்ணன் நீங்கள் போர்க்களத்தில் இருக்கும்வரை போர்புரியப் போவதில்லை என்று சபதம் செய்திருக்கிறான். எனவே அர்ஜுனனை நீங்கள்தான் ஒழிக்கவேண்டும்'' என்றான். அதைக் கேட்டு பீஷ்மர் வருத்தப் பட்டவராய் அர்ஜுனன் இருந்த இடத்திற்குச்

சென்றார். அவருடன் சென்ற கௌரவ வீரர்களுக்கும் பாண்டவ வீரர்களுக்கு மிடையே கடும் போர் மூண்டது.

பீஷ்மரும் அர்ஜுனனும் கடும் போர் புரியலாயினர். இருவரும் சற்றும் சளைக்காமல் போர் புரிந்தனர். இதில் இரு தரப்பிலும் குதிரைகளும் போர் வீரர்களும் தேரோட்டிகளும் காய முற்றனர். கிருஷ்ணரைக் கூட அம்புகள் தாக்கிக் காயப்படுத்தின. இவர்களைப் போல துரோணரும் திருஷ்டத்யும்ன னும் பயங்கரமாகப் போர் புரிந்தார்கள். இதில் திருஷ்டத்யும்னன் தன் தேரை இழந்து பின் வாங்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்போது பீமன் அவனது உதவிக்கு வந்தான். அவன் பீமருடன் கடும் போர் புரிந்து திருஷ்டத்யும் னனைக் காப்பாற்றினான்.

அப்போது துரியோதனன் பீமனைத் தாக்க காளிங்கனைப் படைகளுடன் அனுப்பினான். பீமனுடன் போர் புரிந்து கொண்டிருந்த துரோணர் அவனை விட்டு விட்டு விராடனுடனும் துருபதனுடனும் போர் புரியலானார். பீமன் காளிங்கனின் படையை எதிர்த்து அவனது மகன் சுக்கிரதேவனையும், பானுமந்தனையும் கொன்று படையை அழிக்கலானான். இதைக் கண்டு திருஷ்டத்யும்னன் உற்சாகம் அடைந்து பீமனுக்குத் துணை புரியச் சென்றான்.

தம் தரப்புப் படை அழிவது கண்டு பீஷ்மர் வேகமாக அங்கு வந்தார். அவரை சாத்தியகி, பீமன், திருஷ்டத்யும்னன் ஆகியோர் தடுக்கலானார்கள். பீஷ்மர் அவர்களைக் கடுமையாகத்தாக்கினார். பீமனின் தேர்க்குதிரைகள் அவரது தாக்குதலில் மாண்டன. அப்போது பீமன் திருஷ்டத்யும்னனின் ரதத்தில் ஏறிக் கொண்டான். அப்போது சாத்தியகி பீஷ்மரின் தேரோட்டியைத் தாக்கி கொன்றான். அதனால் அத்தேரின் குதிரைகள் கட்டுக்கு அடங்காமல் பீஷ்மரை எங்கோ இழுத்துக் கொண்டு போயின. அப்போது சாத்தியகி பீமன ருகே போய் அவனது முதுகைத் தட்டி ''பேஷ்! காளிங்கனையும் அவனது மகன்களையும் நீ ஒருவனாகவே எதிர்த்து கொன்றாய்'' என்று பாராட்டினான்.





# இதுவே காரணம்!

பாலூர் ஆயுர்வேத வைத்தியர் அண்ணாசாமி கைராசிக்காரர் என்று பெயர் பெற்றவர். அதனால் சுற்று வட்டாரத்து ஊர்களிலிருந்து நோயாளிகள் வந்து அவரிடம் மருந்து பெற்று அவர் கேட்ட தொகையைக் கொடுத்து விட்டு சந்தோஷமாகச் செல்வார்கள்.

ஒரு முறை அண்ணாசாமியின் பள்ளித் தோழனான கந்தசாமி பல ஆண்டுகளுக்குப் பின் அவரைக் காண வந்தான். அவன் அவரிடம் ''வைத்தியத் தொழில் எப்படி நடக்கிறது? போதிய வருமானம் கிடைக்கிறதா?'' என்று கேட்டான். அண்ணாசாமியும் ''இன்று என் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு நான் நோயாளிகளைப் பார்க்கும் போது கவனி. அப்போது உனக்கு விளங்கும்'' என்றார். கந்தசாமியும் அன்று அண்ணாசாமி நோயாளிகளைப் பார்க்கும் போது அவரருகே உட்கார்ந்து கொண்டு கவனிக்கலானான்.

அண்ணாசாமி முதலில் வந்த நோயாளியைப் பரீட்சித்துப் பார்த்து விட்டு மருந்தைக் கொடுத்தவாறே ''நேற்றிரவு நீ உன் வீட்டில் என்ன சாப்பிட்டாய்?'' என்று கேட்டார். அவனும் ''வழக்கமாக நான் சாப்பிடுவது கஞ்சி தான். அதில் கொஞ்சம் உப்பை போட்டுத் தான் குடிப்பது. நேற்றும் அது போலக் கஞ்சி தான் குடித்தேன்.'' என்றான். அப்போது அண்ணாசாமி '' சரி, இரண்டு ரூபாய் கொடு'' என்றார். அவனும் தன் மடியில் பத்திரமாக வைத்திருந்த சுருக்குப் பையை எடுத்து அவிழ்த்து அதிலிருந்து சில்லரைகளை எண்ணி இரண்டு ரூபாய் கொடுத்து விட்டு மகிழ்ச்சியுடன் சென்றான்.

அடுத்து வந்த நோயாளியை அண்ணாசாமி பரீட்சித்துப் பார்த்து விட்டு மருந்தைக் கொடுத்தவாறே ''நேற்றிரவு உன் வீட்டில் நீ என்ன சாப்பிட்டாய்?'' என்று கேட்டார். அவனும் ''வழக்கமாக ஒரு கூட்டு, ஒரு கறி, பச்சடி, பொரித்த அப்

— எஸ்.கன்னியாகுமாரி

பளம் என்று சாம்பார், ரசம், தயிரு டன் சாதம் சாப்பிடுவேன். நேற்று இவற்றோடு பாயசமும், வடையும் கூடச் சாப்பிட்டேன்'' என்றான். வைத்தியரும் ''சரி. பத்து ரூபாய் கொடு'' எனவே அவனும் சிரித்த வாறே ரூபாய் கொடுத்து விட்டுச் சென்றான்.

அதற்கு அடுத்த நோயாளி வந்ததும் அவனை அண்ணாசாமி பரீட்சித்து விட்டு மருந்து கொடுத்த வாறே '' நீ நேற்று என்ன சாப்பிட்டாய்?'' என்று கேட்டார். அவனும் ''எப்போதும் என் வீட்டில் நான்கு நண்பர்களுடன் மாமிசம், மீன் குழம்பு என்று தான் சாப்பிடுவேன். நேற்றும் அப்படித்தான் சாப்பிட்டேன்'' என்றான். அண்ணா சாமியும் ''சரி, இருபது ரூபாய் கொடு'' எனவே அந்தப் பணத்தைக் கொடுத்து விட்டுச் சென்றான்.

அப்போது கந்தசாமி ''எனக்கு ஒரு விஷயம் விளங்கவில்லை. நீ நோயாளிகளைப் பரீட்சித்து மருந்து கொடுத்து விட்டு 'நேற்றிரவு உன் வீட்டில் நீ என்ன சாப்பிட்டாய்' என்று கேட்கிறாய். இந்தக் கேள்வியை நீ நோயாளிகளைப் பரீட்சிக்கும் போது கேட்டு விட்டுத் தானே மருந்து கொடுக்க வேண்டும். நீ ஏன் அப்படிச் செய்யவில்லை?'' என்று கேட்டான்.

அண்ணாசமியும் ''நான் கேட்கும் பணத்தை நோயாளிகள் கொடுத்து விடுவதை கவனித்திருப்பாய். நான் இக்கேள்வியைக் கடைசியில் கேட்டு அவர்களால் எவ்வளவு பணம் கொடுக்க முடியும் என அறிந்து கொள்கிறேன். அவர்களது பொருளாதார நிலை என்ன என்று கண்டு கொள்ளலாம். கஞ்சி மட்டும் குடிப்பவன் பரமஏழை. அதனால் அவனிடம் இரண்டு ரூபாய் தான் கேட்டேன். அடுத்து வந்தவன் நல்ல சாப்பாடு சாப்பிடும் நடுத்தர வருமானப் பிரிவைச் சார்ந்தவன். அதனால் அவனிடம் பத்து ரூபாய் கொடுக்கும்படிக் கூறினேன். மூன்றாவதவன் கேளிக்கைகளில் மூழ்கும் பணக்காரன் அவன் தினமும் நான்கு பேர்களுக்கு விருந்து சாப்பாடு போடுகிறான். அதனால் அவனிடமிருந்து இருபது ரூபாய் வசூலித்தேன். இது தான் கடைசியில் நான் அவ்வாறு கேட்பதற்குக் காரணம்'' என்றார்.






# எனக்கும் கொடு!

வேலம்பட்டியில் வெங்கப்பன் என்ற வியாபாரி இருந்தான். அவன் மகாக்கஞ்சன். பணம் சேர்ப்பதில் தான் குறியாக இருந்தான். ஒரு பைசா கூட யாருக்கும் கொடுக்க அவனுக்கு மனம் வராது. தனிக்கட்டையாக வாழ்ந்து வந்த அவன் லட்சுமி என்ற பெண்ணை மணந்து கொண்டான். அவளுக்கும் சிக்கனம் பற்றிக் கூறி சாப்பாடு மிக எளிமையாக இருக்க வேண்டும் என்றும் பட்சணங்கள் எதுவும் செய்யக் கூடாது என்றும் கூறி வந்தான்.

வெங்கப்பனுக்கு தன் ஊருக்குப் பக்கத்திலுள்ள நகரத்தில் வியாபாரம் செய்தால் நிறையப் பணம் கிடைக்கும் என்ற ஆசை ஏற்பட்டது. அதனால் நகரில் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அங்கேயே இருக்கலாம் என்று எண்ணினான். ஆனால் நகரில் வீட்டு வாடகை மிக அதிகம் என்று விசாரித்ததில் தெரிந்து கொண்ட அவன் தன் கிராமத்திலிருந்து தினமும் நகருக்குப் போய் வியாபாரம் செய்து விட்டு மாலையானதும் திரும்பி வருவது எனத் தீர்மானித்தான்.

அவன் ஊரை விட்டு நகருக்கு தினமும் போனதும் லட்சுமி தனக்குப் பிடித்தமான பட்சணங்களைச் செய்து சாப்பிட்டு விட்டு தான் பட்சணம் செய்த அடையாளமே தெரியாதபடி அடுப்பை அணைத்து வாணலியைத் தேய்த்துக் கவிழ்த்து வைத்து வந்தாள்.

ஒரு நாள் வெங்கப்பன் மாலையாகி நகரிலிருந்து திரும்பி வந்த போது அவ்வூர் கோவிந்தன் அவனை வழியில் சந்தித்து'' என் வீட்டில் இன்று பஜனை. நீ வந்து பிரசாதம் வாங்கி சாப்பிட்டு விட்டுப் போ. உன் மனைவி தான் ரவா கேசரியும் வடையும் பிரமாதமாகத் தயாரித்திருக்கிறாள்'' என்றான். அது கேட்டு

— எஸ்.சோபினி

வெங்கப்பன் திடுக்கிட்டு ''என் மனைவிக்கு இதெல்லாம் செய்யத் தெரியாதே'' என்றான்.

கோவிந்தனோ ''அவளுக்கா தெரியாது? என் மனைவிக்கு பஜ்ஜி, போண்டா, பக்கோடா ஹல்வா, மைசூர்பாக் போன்றவை செய்வதெல்லாம் சொல்லிக் கொடுத்தாளே. மேலும் தினமும் உன் வீட்டில் பட்சணம் செய்யப் படும் வாசனை வருகிறதே'' என்றான். வெங்கப்பன் எதுவும் பேசாமல் எல்லாம் கேட்டுக் கொண்டான்.

மறுநாள் காலை அவன் நகருக்குப் போவது போல நடித்து சற்று நேரத்திற்குப் பின் தன் வீட்டிற்குள் கொல்லை வழியாகப் புகுந்து ஓரிடத்தில் மறைந்து கொண்டு லட்சுமி என்ன செய் கிறாள் என்று பார்க்கலானான். லட்சுமி அன்று அப்பம் சுட்டாள். வெல்லப்பாயசம் செய்தாள். பிறகு தெருவில் விற்ற கரும்புத்துண்டை வாங்கி வந்து தோல் சீவி துண்டுகளாக்கித் தின்று விட்டு சக்கையை எடுத்து போய் வீதியி லுள்ள குப்பைத் தொட்டியில் போட்டு விட்டு வந்து நிம்மதியாகப் படுத்துத் தூங்கினாள்.

வீட்டில் ஒளிந்திருந்த வெங்கப் பன் அவளுக்குத் தெரியாமல் அங்கி ருந்து வெளியே வந்து மாலையா னதும் காலில் ஒரு கட்டு போட்டுக் கொண்டு வீட்டிற்கு வந்தான். அவன் லட்சுமியிடம் ''காலில் என் னை ஒரு பாம்பு கடித்து விட்டது. அது நீ சாப்பிட்ட கரும்புத் துண் டின் பருமன் இருந்தது. அது கடித்ததும் என் கால் நீ சாப்பிட்ட அப்பம் போல ஊதி விட்டது நீ சாப்பிட்ட பாயசம் நுரை போல என் வாயிலிருந்து நுரை வெளிவந்தது'' என்றான்.

லட்சுமி அது கேட்டு வெட்கித் தலை குனிந்தாள். அப்போது வெங் கப்பன் ''பரவாயில்லை. நீ நன்றாக பட்சணம் செய்கிறாய். இனி சிக்க னம் வேண்டாம். சாப்பிடத்தானே சம்பாதிக்கிறோம், இனிமேல் நீ தயாரிப்பதில் கொஞ்சம் எடுத்து எனக்கும் வை'' என்றானே பார்க்கலாம்!



# பரோபகாரி பழனி

இது ஒரு அம்புலிமாமாவின் காணிக்கை

ஓவியம் : பாணி

ராமபுரம் மக்களுக்கு திருடர் பயமும் பிசாசு பயமும் ஒரே சமயத்தில் பிடித்துக் கொண்டது.





பாழடைந்த அரண்மனையில் பிசாசுகள் வசிக்கின்றன என்றும் திருடர் தொல்லை அதிகரித்து விட்டது என்றும் எல்லோரும் எண்ணி அஞ்சினார்கள். அச்சமயத்தில் பழனி தன் நாயுடன் அவ்வூருக்கு வந்து ஊராருக்கு உதவ பழைய அரண்மனையில் தங்கினான்.









பழனி இரவுகளில் வீதி
களில் திரிந்து அங்கு தென்
பட்டவர்களை எல்லாம்
பிடித்துக் கொண்டு போய்
பழைய அரண்மனை
யில் அடைத்தான்.




சிலநாட்கள்பிசாககள்பற்றியபயம்
குறைந்தது. ஆனால் கண்ணில்
பட்டவர்களை பழனி திருடன்
எனக்கூறிப் பிடித்துப் போகிறான்
என்றபுகார் எழுந்தது.


"எல்லோரையும்
சந்தேகித்துப்
பிடிக்கிறாயாமே"
"ஆம். இரவு
முழுவதும் பிசாககளுள்ள
அரண்மனையில் அவர்கள்
இருந்ததால் பிசாக பற்றிய
பயம் போயிற்று. இனி,
திருடர் பயமும் போய்
விடும்."


சில நாட்களில் திருடர்
பயமும் போய் விட்டது.
பழனியின் செயலைப்
பாராட்டி கிராம அதிகாரி
ஊரார் முன் அவனை
கௌரவித்தார்.


"யார்? வீட்டுத்
திருடர்களா?"
"தம்பி!
கண்ணுக்
குத் தெரி
ந்த திருட
ர்களை
ஒழித்தாய். ஆனால் மறைந்
துள்ள வீட்டுத் திருடர்களை
என்ன செய்வாய்?"


என் தந்தை கோபாலன் இறக்கும் போது
"நான் கணக்குப்பிள்ளை கணபதியிடம்
நாலாயிரம் ரூபாய் கடன் வாங்கிப் பத்தி
ரம் எழுதிக் கொடுத்தேன் கடனைக்
கொடுத்துவிட்டேன். ஆனால் அவன்
பத்திரத்தைத் திருப்பிக் கொடுக்க
வில்லை. அதை வாங்கிக் கொள்" என்றார்.


"என் தந்தை சொன்ன படி கணபதியிடம் பத்திரத் தைக் கேட்டேன். அவன் பத்தி ரத்தைக் கொடுக்காமல் என் வீட்டையும் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டான்."
"உண்மை தெரிந்து கொண்டு வேண்டியதைந் செய்கிறேன்"


பழனி அன்றிரவு தெருக்களில் சுற்றிக் காவல் புரியும் போது கணபதியின் வீட்டுச் சுவரில் கன்னம் வைத்தான்.


மறுநாள் பழனி கிராம அதிகாரியிடம் கணக் குப் பிள்ளையை அழைத்துவரச் சொன்னான்.


"தம்பி! நீ ஊரில் திருடர் கள் இல்லாமல் செய்துவிட்டதாக கூறுகிறார்களே. ஆனால் என்வீட் டுச் சுவரில் யார் கன்னம் வைத் தார்கள்?"
"அது பிசாசு களின்வேலையாக இருக்கலாம்"


"பிசாசா? அது உனக்கு எப்படித்தெரியும்?
"நான் தங்கி இருப் பது பிசாசுகளின் அரண் மனையில் தானே. கோபால னின் ஆவி ஒரு முறை உங்க ளைப் பார்க்க விரும்பு கிறது. வருகிறீர் களா?"


ஐயோ! நான் போக மாட்டேன். கோபாலனின் ஆவி தான் என் வீட்டில் கன்னம் வைத்திருக்கும்.''
''போங்கள் கணக்குப் பிள்ளை! பிசாசுடன் பேசும் வாய்ப்பு கிடைக்கிறதே''


"அதைநினைத்தாலேமனம்'படக்' படக்கென்று அடித்துக்கொள்கிறது."


''என்ன விஷயம்? ஏன் பதறுகிறாய்?''


"அவன்என்னிடம்கடன்வாங்கிக் கொண்டான். அதைத்திருப்பிக்கொடுத்துவிட்டான். அவன்எழுதிக்கொத்த பத்திரத்தைத் திருப்பிக் கொடாமல்அவனதுவீட்டைஆக்கிரமித்து விட்டேன். அவன்பழிவாங்குவான்".
''அப்படியா! அந்த வீட்டை அவனது மகன்களிடம் ஒப்படை. கடன் பத்திரத்தையும் கொடு. கோபாலனின் ஆவியிடம் 'இனி கணபதியைத் துன்புறுத்தாதே' என்று சொல்லி விடுகிறேன்.''


பழனி கூறியபடி பத்திரத்தையும் வீட்டையும் கோபலனின் புதல்வர்களிடம் ஒப்படைத்ததுடன் கிராம அதிகாரி விதித்த அபராதம் ஆயிரம் ரூபாயையும் செலுத்தினான்.


பழனி மறுநாளே தன் நாயுடன் ராமபுரத்திலிருந்து கிளம்பி வேறொரு ஊருக்குச் சென்றான்.

# அம்புலிமாமா

## பாரத தரிசனம் வாசகர்களுக்குப் போட்டி

(இந்த இதழின் வினாக்களுக்கான விடைகளை அடுத்த இதழில் பரிசுரிக்கிறோம். இதற்குள் இவ்வினாக்களின் விடைகளைத் தெரிந்து கொண்டு சரி பாருங்கள்.)

1



1. அ) ஒரே காலத்தில் வாழ்ந்த புகழ் பெற்ற இரு சொற்பொழிவாளர்கள் யாவர்? அவர்கள் இருவரில் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர் யார்?
   ஆ) முதலாவது பௌத்த நூல் எந்த மொழியில் எழுதப் பட்டது?
   இ) மிகப்பழைய பௌத்த நூல் எது?
   ஈ) முதலாவது ஜைனநூல் எம்மொழியில் எழுதப் பட்டது?
   உ) மிகப்பழைய ஜைனநூல்களின் பெயர்கள் என்ன?

2

புகழ் பெற்ற ஒரு மன்னன் வேட்டையாடச் சென்றான். அவன் ஒரு பிராணியை அம்பால் அடித்த போது அதன் ரத்தம் அவனது அங்கவஸ்திரத்தின் மீது தெறித்தது. அவன் அந்த அங்கவஸ்திரத்தை எடுத்து ஒரு வீரனிடம் கொடுத்து அதை ராணியிடம் சேர்ப்பித்து விடுமாறு கூறினான். அது பற்றி எதுவும் ராணியிடம் சொல்லக் கூடாதென அவன் அவ்வீரனுக்குக் கட்டளை இட்டான். வீரன் கொடுத்த தன் கணவனின் அங்கவஸ்திரத்தைக் கண்ட ராணி எவ்வாறு செயல் படுவாள் எனக் கண்டறியவே மன்னன் விரும்பினான். ஆனால் இந்த விஷப்பரீட்சை விபரீதத்தில் முடிந்தது. மன்னன் அரண்மனைக்கு வருமுன்னரே ராணி மன்னன் இறந்து விட்டான் என்ற துயரத்தில் மடிந்து போனாள்.

அந்த மன்னனின் பெயர் என்ன? அந்த ராணி யார்?



## ஆக்கபூர்வமான போட்டி

பிரசுரிக்கத்தக்கதென கருதப்பட்ட மே மாதப் பழமொழி (முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போல) கதை.

# திருடனுக்குப் புகலிடம்

வள்ளியூர் பெட்டிக்கடை வியாபாரி வள்ளியப்பனின் வீட்டுக்கதவை ஒரு நாள் நள்ளிரவில் யாரோ தட்டினார்கள். வள்ளியப்பன் கதவைத்திறக்கவே ஒருவன் சட்டென உள்ளே நுழைந்து சட்டென கதவை சாத்தி '' என்னைக்காவல் வீரர்கள் பிடிக்க வருகிறார்கள். நீங்கள் என்னைக் காப்பாற்றினால். உங்களுக்கு இந்த தங்க நாணய மூட்டையைக் கொடுக்கிறேன். இதில் பத்து லட்சம் ரூபாய் பெறுமான தங்க நாணயங்கள் உள்ளன'' என்றான்.

வள்ளியப்பன் பத்து லட்சம் என்றதும் வாயைப்பிளந்தான். திருடனை மறைத்து வைக்க சம்மதித்தான். காவல் வீரர்கள் வந்து யாராவது திருடன் அந்தப்பக்கம் வந்தானா என்று கேட்டபோது வள்ளியப்பன் யாருமே வரவில்லை என்று கூறி அனுப்பி விட்டான். காவல் வீரர்கள் போன பின் அவன் திருடனைக்கண்டு ''அவர்கள் போய் விட்டார்கள். இனி பயமில்லை.எனக்கு நீ தங்க நாணயப்பையைக் கொடுத்து தப்பிப் போய் விடு'' என்றான்.

திருடனோ தன் இடுப்பிலிருந்த கத்தியை எடுத்து வள்ளியப்பனின் மார்புக்கு நேராக நீட்டி ''மரியாதையாக வீட்டிலுள்ள பணம், தங்கநகை யாவற்றையும் எடுத்துக் கொடுத்து விடு. இல்லாவிட்டால் உன்னைக் கொன்று விட்டு எல்லாவற்றையும் நானே எடுத்துக் கொண்டு போய் விடுவேன்'' என்றான்.

அப்போது வள்ளியப்பன் ''என்னப்பா இது! உன்னை நான் காவல் வீரர்களிடமிருந்து காப்பாற்றினால் பத்து லட்சம் ரூபாய் கொடுப்பதாகச் சொன்னாயே. நான் உன்னைக் காப்பாற்றியும் விட்டேனே. அதற்கு பணம் கொடுப்பதாக சொன்ன நீ இப்போது என்னையே மிரட்டிக் கொள்ளை அடிக்கிறாயே. இது நியாயமா?'' என்று கேட்டான்.

திருடனுக்கு '' என் போன்ற திருடன் நியாய அநியாயங்களைப் பற்றி எல்லாம் யோசிக்கமாட்டான். தான் ஆபத்தில் சிக்கிக் கொண்டால் அதிலிருந்து விடுபடவே முயல்வான். அதைத்தான் நான் செய்கிறேன். நீயோ பெட்டிக்கடைக்காரன். சேர்ந்தாற்போல் ஒரு ஆயிரம் ரூபாயை உன் வாழ்நாளில் ஒரு போதும் பார்த்திருக்கவே மாட்டாய். அதனால் தான் உனக்குப் பத்து லட்சம் ரூபாய் தருவதாக ஆசைகாட்டினேன். நீயும் முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவது போல பத்து லட்சம் என்றதும் வாயைப் பிளந்து விட்டாய். நான் எனக்குக் கிடைத்த வாய்ப்பை விட்டு விடுவேனா'' உம் எடு பணத்தையும் நகையையும்'' என்று மறுபடியும் மிரட்டவே தன்னிடமிருந்த ஐநூறு ரூபாயையும் தன் மனைவியின் மூன்று பவுன் நகைகளையும் எடுத்துக் கொடுக்க திருடன் அவற்றையும் எடுத்துக் கொண்டு போய் விட்டான்.

பெட்டிக்கடை வியாபாரி பத்து லட்சம் கிடைக்கும் என்று ஆசைப்பட்டது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் பட்டது போலத்தான் ஆயிற்று.

– தமிழ்ச் செல்வி





# பாரதநாடு அன்றும் இன்றும்

## ஜகன்நாதபுரி என்ற பூரி

கிழக்குக் கடற்கரையில் ஒரிஸ்ஸா மாநிலத்தலுள்ள ஜகன் நாதபுரி என்ற புரியைத் தான் பெரும்பாலோனோர் பூரி எனக் குறிப்பிடுகிறார்கள். இது நம் நாட்டுப் பழங்கால நகரங்களில் ஒன்றாகும். இங்குள்ள புகழ்பெற்ற ஆலயத்தில் ஜகன்நாதர் (கிருஷ்ணர்) பலபத்திரர் (பலராமர்) சுபத்திரை ஆகிய மூவரின் விக்கிரகங்கள் உள்ளன. இப்போதுள்ள ஆலயத்தை பனிரெண்டாவது நூற்றாண்டில் கங்க வம்சத்து மன்னன் கோடகங்கன் நிர்மாணித்தானாம். அதற்கு முன்பே பல ஆலயங்கள் கட்டப்பட்டிருந்தன.

ஆலயத்திலுள்ள ஜகன்நாதரின் மர விக்கிரகத்தில் ஏதோ ஒரு அற்புதப் பொருள் உள்ளது என்றும் அது பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை புது விக்கிரகத்தில் வைக்கப்படுகிறது என்கிறார்கள். அந்த அற்புதப் பொருள் ஸ்ரீகிருஷ்ணரின் அம்சம் எனக் கருதப் படுகிறது. இது அப்பகுதியிலுள்ள காட்டில் இருப்பதாக ஒரு உணர்வு அப்பகுதி மன்னனான இந்திரத்யும்னன் என்ற மன்னனுக்கு ஏற்பட்டதாம். அதைத் தேடிக் கண்டு பிடிக்க நான்கு இளைஞர்களை நான்கு திசைகளிலும் அனுப்பினான்.

அவர்களில் ஒருவனான வித்தியாபதி கிழக்கு திக்கில் சென்று விசுவாவசு என்ற வேடர் மன்னனின் விருந்தாளியாகத் தங்கினான். அந்த மன்னனின் மகள் லலிதாவித்தியாபதியை விரும்பி மணந்து கொண்டாள். விசுவாவசு தினமும் அதிகாலையில் எழுந்து எங்கோ போய் பூஜை செய்து விட்டு வருவதை வித்தியாபதி கவனித்தான்.

அது என்ன என்று அறிய அவன் விரும்பவே, விசுவாவசு அவன் கண்களைக் கட்டி விட்டு தன்னோடு அழைத்துக் கொண்டுதான் பூஜை செய்யும் இடத்திற்கு அழைத்துச் சென்றான். வித்தியாபதிதன் மாமனாருக்கு தெரியாமல் கடுகை வழி நெடுக இறைத்துக் கொண்டே சென்றானாம்.

பூஜை செய்த குகைக்குள் வித்தியாபதியின் கண் கட்டை விசுவாவசு அவிழ்த்து விடவே அவன் கிருஷ்ண பரமாத்மாவின் அம்சமுள்ள பொருளைக் கண்டான். அதன்பின் இருவரும் அங்கிருந்து முன் சென்றது போலவே திரும்பி வந்தார்கள். ஆனால் சில நாட்களுக்குப் பின் வித்தியாபதிதான் இறைத்துச் சென்று கடுகு முளைத்து வளர்ந்ததைக் கொண்டு விசுவாவசு பூஜை செய்யும் குகையை அடைந்து கிருஷ்ண பரமாத்மாவின் அம்சப் பொருளை எடுத்துக் கொண்டு தலைநகருக்குச் சென்றான்.

இந்திரத்யுன மன்னன் அதைக் கண்டு மகிழ்ந்து போனான். அவனே காட்டிற்குப் போய் வேடர் மன்னன் விசுவாவசுவைக் கண்டு நடந்ததற்கு மன்னிப்புகோரி, இனி பகவானின் அந்த அம்சத்தை உலகத்தவர் யாவரும் தரிசித்து புண்ணியம் பெறுவார்கள் என்றும் எடுத்துக் கூறினான். வித்தியாபதி, லலிதா வம்சத்தவரே இன்றும் ஜகன்நாதர் ஆலய அர்ச்சகர்களாக இருப்பது குறிப்பிடத்தக்கது.

இம்மாதம் நடக்கும் ஜகன்நாதர் தேர்த் திருவிழாவிற்கு ஆயிரக்கணக்கான மக்கள் வருகிறார்கள். இந்த ஆலயத்தில் கொடுக்கப்படும் பிரசாதம் மட்டும் இன்னமும் பழங்கால முறையிலே தயாரிக்கப்பட்டு வினியோகிக்கப்படுகிறது.

பூரியில் ஜகன்நாதர் ஆலயத்தோடு இன்னும் பல ஆலயங்கள் உள்ளன. இங்கு வருவோர்தங்க நவீன வசதிகள் கொண்ட பல இடங்கள் உள்ளன. இக் கடற்கரையில் மாலைவேளையில் உல்லாசமாகப் பொழுது போக்குபவர்களைக் காணலாம். சமுத்திரத்தில் புனித நீராடுவோரையும் பார்க்கலாம். இங்குள்ள சம்ஸ்கிருத மொழி வளர்ச்சிக் கழகம், ஆயுர்வேத வைத்திய ஆராய்ச்சிக் கழகம் ஆகியவை புகழ் பெற்றவை.



கதைக்குச் சரியான முடிவை எழுதித் தக்க பரிசைப் பெறுங்கள்

# ஆக்க பூர்வமான போட்டி

ஒரு கதையின் முன் பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது. இதைச்சரியாக முடிக்க வேண்டியது தான் உங்கள் முயற்சி. இதன் பின் பகுதியை 200 சொற்களுக்குள் எழுதி அனுப்புங்கள். மிகச்சிறந்த படைப்பிற்கு கவர்ச்சிகரப்பரிசு கிடைக்கும். இப்போட்டி இளைஞர்களுக்கு மட்டுமே. உங்கள் பெயர், வயது, படிக்கும் வகுப்பு, பின்கோடுடன் முகவரி ஆகியவற்றை எழுத மறந்து விடாதீர்கள். இளைஞர்களுக்கு இது ஒரு அரிய வாய்ப்பு!

**கதையின் முன் பகுதி :**

வெகுகாலத்திற்கு முன் ஒரு குரு எப்போதும் சிரித்த முகத்துடன் இருந்து வந்தார். அவரைப் போலவே அவரிடம் சில சீடர்கள் சேர்ந்தார்கள். குரு எங்கு சென்றாலும் நடந்தே செல்வது கண்டு சீடர்கள் ''நம் குரு நடந்து செல்வதா? அவரை நடக்க அனுமதிக்கக் கூடாது. அவர் செல்வதற்கு ஒரு குதிரையை வாங்கிக் கொடுக்கலாம்'' எனத் தீர்மானித்துத் தம் முடிவை குருவிடம் தெரிவித்தார்கள். குருவும் ''சரி, நல்லகுதிரையாகப் பார்த்து வாங்கி வாருங்கள்'' என்றார்.

அவர்களும் கிளம்பிப் போய் ஓர் ஏரிக் கரைபக்கம் சில குதிரைகளைக் கண்டனர். அக்குதிரைகளின் உரிமையாளர்கள் அவற்றின் விலை கூறியதைக் கேட்டு அவர்கள் ''அடேயப்பா! அவ்வளவு விலையா?'' என்று திகைத்தார்கள். அப்போது ஒரு சீடன் ''எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நாம் ஒரு குதிரை முட்டையை வாங்கி அடைகாக்க வைத்தால் அதிலிருந்து குதிரைக் குட்டி வெளி வரும்''. என்று கூறவே மற்ற சீடர்களும் ''இது நல்ல யோசனை. இதை நம் குருவிடம் தெரிவிப்போம், ''எனக்கூறித் திரும்பிப் போய் குருவைக் கண்டார்கள். '

ஆகா! என் சீடர்கள் தாம் என்ன புத்திசாலிகள்!''என்று அவர் அவர்களைப் புகழ்ந்தார்.

இதன்பின் அவர்களது முயற்சி பற்றி ஊகித்து நீங்கள் இக்கதையின் பின் பகுதியை ஆகஸ்ட் 31க்குள் எமக்குக் கிடைக்கும் படி அனுப்புங்கள். பரிசு பெற்ற படைப்பு அக்டோபர் இதழில் பிரசுரிக்கப்படும்

–ஆசிரியர்

## ஜூலை 2000 பாரத தரிசனப் போட்டியின் விடைகள்

அ) குணாட்டியரின் பிரஹ்கதையால் ஊக்கமடைந்து எழுதப்பட்ட தசகுமார சரித்திரம்

ஆ) யோக வாசிஷ்டராமாயணம். வசிஷ்டரும் வால்மீகியும் சேர்ந்து இதை எழுதினார்கள் என்று கருதப்படுகிறது.

இ) விசாகதத்தரின் முத்திரா ராட்சஸம்

ஈ) சூத்திரகரின் மிருச்சகடிதம்

உ) அர்ஜுனன், பப்ருவாகனன், உலூபி





































Amul

Marketed by Gujarat Co-operative Milk Marketing Federation Limited, Anand 388 001. E-mail: cheese@amul.com For FREE home delivery of our products in select cities visit the Amul Cyberstore at www.amul.com

daCunha/ACS/2/2000

# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.



போட்டோ
வாக்கியப்
போட்டி
அம்புலிமாமா
வடபழனி
சென்னை-600 026.





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி ஆகஸ்ட் 25-ம் தேதிக்குள் மேலே உள்ள முகவரிக்கு வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் அக்டோபர் 2000 மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

## வாழ்த்துக்கள்



ஜுன் 2000 போட்டியில்
பரிசு பெற்றவர் :
**புதுவை தமிழ்நெஞ்சன்**
6, இளங்கோ அடிகள் தெரு,
மீனாட்சிப் பேட்டை
புதுச்சேரி-605 009.



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ : சாப்பிட முடியவில்லை!
இரண்டாவது போட்டோ : சாப்பிட எதுவுமில்லை!!

